# திருப்பரங்குன்றத் தலவரலாறு


ஆசிரியர் :

புலவர்மணி, வித்துவான்

திரு. தி. கி. சுந்தர மூர்த்தி அவர்கள்

தலைமைத்தமிழாசிரியர்

தியாகராசர் நன்முறை உயர்நிலைப்பள்ளி,

மதுரை.


அணிந்துரை :

உயர்திரு. அ. உத்தண்டராம பிள்ளை அவர்கள்,
B.A., B.L., I. A. S.

சென்னை மாநில அறநிலைய ஆணையாளர்.




திருக்கோயில் வெளியீடு.





1960

விலை ரூ. 1

# அணிந்துரை.



( திரு அ. உத்தண்டராமன் அவர்கள், ஐ. ஏ. எஸ்.,
ஆணையர், அறநிலையத்துறை, சென்னை )

வளர் பூங்கோங்க மாதவியோடு மல்லிகைக்
குளிர் பூஞ்சாரல் வண்டறை சோலைப் பரங்குன்றம்
தளிர் போன்மேனித்தை யனல்லாளோ டொருபாகம்
நளிர்பூங் கொன்றை சூடினன் மேய நகர்தானே.

—திருஞான சம்பந்தர்.

தண்ணூர் தமிழளிக்கும் தண்பாண்டி நாட்டிலே பாடல் பெற்ற சிவத்தலங்கள் பதினாலில் ஒன்று திருப்பரங்குன்றம். முருகனுக்குச் சிறந்ததாகக் கூறப்படும் ஆறு திருப்பதிகளில் ஒன்றான பெருமையுமுடையது. சங்க இலக்கியங்களிலும், திருமுறைகளிலும், திருப்புகழ் முதலியவற்றிலும் இப்பழம்பதி புகழ்ந்து பேசப்படுகிறது. "கொடி நுடங்கு மருங்கிற் கூடல் குடாஅது பல் பொறி மஞ்ஞை வெல்கொடி உயரிய ஓடியா விழவின் நெடியோன் குன்றம்" என்று அகநானூற்றுப் பாடல் ஒன்றில் கூறப்படுகிறது. நக்கீரர் திருமுருகாற்றுப் படையில் திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை என்பவைகளை முருகப்பெருமானுக்கு உகந்த தலங்களாகக் கூறியிருக்கிறார். சூரபன்மனுடன் போருக்குச்செல்ல முருகன் படைவீடு கொண்டிருந்தது திருச்செந்தூரிலே யென்றாலும் மற்ற ஐந்திடங்களையும் கூடப் படைவீடுகள் என்று கூறுவது வழக்காற்றில் வந்து விட்டது. நக்கீரர் பூதத்தினின்றும் விடுபட திருமுருகாற்றுப் படை பாடியது திருப்பரங்குன்றத்தி லானபடியால் அப்பதியை முதலில் அமைத்துள்ளார். சுந்தரமூர்த்தி சுவாமிகள் இப்பதியில் இறைவனை வணங்கச் சென்றபோது சேர, சோழ, பாண்டியர் மூவரும் உடனிருந்து வழிபட்டனர் என்பதை அவர் பாடிய ஒரு பாடலிலிருந்தும், சேக்கிழார் பெரிய புராணத்திலிருந்தும் அறிகிறோம்.

இத்தகைய பழம்பெருமை வாய்ந்த சிவமுருகப்பெரும் பதிக்குத் தலவரலாறு ஒன்று எழுதி, வழிபடவரும் மக்கட்குதவியாகச் செய்திருக்கும் திருப்பரங்குன்றக்கோயில் ஆட்சிக்குழுவினர் இறைபணியாளர் இவர்களின் முயற்சி பெரிதும் பாராட்டத்தக்கது. அரிய ஆராய்ச்சியுடன் பல செய்திகளைத்தொகுத்து நல்லமுறையில் இந்த நூலை எழுதி உதவிய வித்துவான் திரு தி. கி. சுந்தரமூர்த்தி அவர்களுக்குத் தமிழ் உலகும், சைவ உலகும் என்றும் நன்றி செலுத்தும் கடப்பாடுடையது.

... ... ... ... ... பரங்குன்றறை
உன்னிய சிந்தை உடையவர்க்கில்லை உறுநோயே.
... — திருஞானசம்பந்தர்.

கண்டின்கனி சிந்துஞ்சுவை பொங்கும் புனல்
தங்கும் பொழில்
கந்தங் கொள்பர ங்குன்றமர் பெருமாளே.
— அருணகிரிநாதர்.

அடிகே ளுமக்காட் செயவஞ் சுதுமென் றமரர் பெருமா
னையாரு ரனஞ்சி
முடியா வுலகாண் டமூவேந் தர் முன்னே மொழிந்தா
றுமோர்நான்குமோரொன் றினையும்
படியா வினவகற்று வல்ல வடியார் பரங்குன் றமேய
பரம னடிக்கே
குடியா கிவானோர்க் குமோர்கோ வுமாகிக் குலவேந்
தராய் விண் முழுதாள் பவரே.
— சுந்தரர்.

சென்னை
28—7—60





மூலவர் திருவுருவம்

# பொருளடக்கம்

## படங்கள்

1. மூலவர் திருவுருவம்
2. முன்தோற்றம்
3. கோபுரக் காட்சி
4. பசுப்பூசை, தாண்டவம்
5. திருமகள் தீர்த்தம்
6. திருமணக் காட்சி
7. நக்கீரர்
8. தென்பரங்குன்றக் குகை
9. மலை வழி மண்டபம்
10. திருமலை நாயக்கர், மந்திரி
11. சரவணப் பொய்கை
12. வாகனங்கள்
13. வியாசர், உக்கிரமூர்த்தி
14. அண்டாபரணர், பராசலர்
15. திருமால் அவதாரம்
16. சிவன்கோயில், மண்டபம்
17. இராணி மங்கம்மாள்
18. தெப்பம், மண்டபம்



# திருப்பரங்குன்றத் தல வரலாறு



1. அமரர் இடர்தீர்த்தே அவர்க்கருளும் வென்றிக்
குமரனடி சிந்திப்பாம் கூர்ந்து.

— சைவ சமய நெறி.

2. சுருதிமறை பிலிற்றியிடுஞ் சதுமுகனா
சடங்கியற்றத் தோகை பாகன்
கருதிவிழி விருந்தருந்தக் கண்ணிறைந்த
மேனியான் கைந்நீர் வார்ப்பத்
தருதியெனக் கையேந்திப் பரிதிமதி
விளக்கேந்தத் தந்தி மாதை
வருதியெனக் கைப்பிடித்துப் பரங்கிரியின்
மணந்தவனை வணக்கஞ் செய்வாம்.

3. பரங்குன்றிற் பன்னிருகைக் கோமான்தன் பாதம்
கரங்கூப்பிக் கண்குளிரக் கண்டு —சுருங்காமல்
ஆசையா னெஞ்சே அணிமுருகாற் றுப்படையைப்
பூசையாக் கொண்டே புகல்.



10. பரங்குன்றம் கோபுரத்தின் முன் தோற்றம்

# முன்னுரை

தமிழ்மக்கள் கடவுள் பக்தியில் சிறந்தவர்கள். கடவுளை அவர்கள் தங்களுடைய வாழ்க்கையில் என்றும் மறந்ததே இல்லை. இறைவனை வாழ்த்துப் பொருளாக மட்டுமன்றி வாழ்வுப் பொருளாகவும் தமிழர் கொண்டனர். நாளும் நினைந்து வழிபடுதற்கேற்ற சூழ்நிலைகளையும் அவர்கள் அமைத்துக் கொண்டிருந்தனர். தனித்தும் பலர்கூடியும் இறைவனை வழிபட்டனர். விழாக்கள் பலஎடுத்துச் சிறப்பித்தனர். இதனால் அவர்களது இறையுணர்வு மேன் மேலும் வளர்ச்சியுற்றது.

தமிழகத்திலுள்ள திருக்கோயில்களைப் போல் வேறெங்கும் காணலரிது. தமிழ் மக்கள் தத்தம் மனஇயல்புக்கேற்றவாறு எல்லாத் தெய்வங்களையும் வழிபட்டாலும், தமிழகத்திற்கே தனிஉரிமை படைத்த தெய்வமாக முருகனை வழிபட்டு வந்தனர் முருக வழிபாடு தென்னாட்டிற்கே சிறப்பாக அமைந்துள்ளது. தமிழர்கள் முருகனிடம் பேரன்பு கொண்டவர்கள். அதற்கறி குறியாக முதல் திணையாகிய குறிஞ்சிக்குத் தெய்வமாக முருகனை வைத்துப் போற்றினர். குறிஞ்சிக் கடவுளெனப் பெயர் சூட்டினர். மலையும் அதைச் சார்ந்த இடமும் குறிஞ்சி நிலமாகும். குறிஞ்சிக்குரிய தெய்வம் முருகன் என்பதைச் "சேயோன் மேய மைவரை உலகம்" என்று தொல்காப்பியம் குறிக்கின்றது. பரிபாடல் போன்ற பழந்தமிழ் நூல்களாலும் இதனை உணரலாம்.

மலையின் மேல் முருகனைக் காணுதற்குப் பிறிதொரு காரணமும் உண்டு. கல்வியறிவு ஒழுக்கங்களில் சிறந்த பெரியவர்களை உயர்ந்த இடத்திலிருத்தி வழிபடுவது வழக்கம். "உயர்ந்த இடத்தில் இருப்பவன் வணங்குதற்குரியவன்" என்று பெரியோர் கூறுவர். உலகில் உயர்ந்த இடம் மலையேயாகும். இதனை நன்குணர்ந்த தமிழர் அவ்வுயரிடத்தில் முருகனை அமைப்பதே முறையெனக் கொண்டனர். எனவே குறிஞ்சி நிலம் முருகனுக்குரிய நிலமாயிற்று. முருகனும் "குறிஞ்சிக் கிழான்" 'குறிஞ்சிக் கடவுள்' எனப் பெயர் பெற்றான். அப்பெருமானது அருட் செயல்கள் அளவிறந்தன,

வாக்கு மனங்கழிய நிற்கும் முருகப்பெருமான் வீற்றிருந் தருளும் மலைகளுள் சிறந்ததும், திருமுருகாற்றுப் படையுள் முதற்படை வீடாகத் திகழ்வதுமாகிய திருப்பரங்குன்றத் தல வரலாற்றை எழுதும் பேறு திருவருளால் அடியேனுக்குக் கிட்டியது. அப்பெருமான் அருள்துணைகொண்டு இதனை எழுதியுள்ளேன். இந்நூல் வெளிவருவதற்கு என்னைப் பல்லாற்றானும் ஊக்கிய, மதுரை மீனாட்சிசுந்தரர் திருக்கோயில், திருப்பரங் குன்றம் முருகன் திருக்கோயில் இவற்றின் இறைபணியாளரும் பேரன்பருமாகிய உயர்திரு ஆர். கிருஷ்ணசாமி B. A., B. L. அவர்கட்கும், எழுதுங்கால் உதவிபுரிந்த என் நண்பர் தமிழாசிரியர் உயர்திரு வித்துவான் தி. ச. சுப்பிரமணியம் அவர்கட்கும் நன்றி உரியதாகும்.

வாழ்க செவ்வேள் மலரடி.

அன்பன்,

மதுரை
1—8—59

தி. கி. சுந்தரமூர்த்தி



26. சிற்பப்பொலிவுமிகும் திருக்கோபுரக்காட்சி

# திருப்பரங்குன்றத் தல வரலாறு

## தலமும் இருப்பிடமும்

'பாண்டி நாடே பழம்பதி' யென மாணிக்கவாசக ரால் போற்றப்படுவது செந்தமிழ்ப் பாண்டியநாடு. இது சந்தனப் பொதியச் செந்தமிழ் முனிவனும், சவுந் தர பாண்டியன் எனும் தமிழ் நாடனும், சங்கப் புல வரும் தழைத்தினிதோங்கிய மங்கல மாண்பினை உடையது. 'ஆடகமதுரை' 'கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை' என்னும் மணி மொழிகள் பாராட் டிக் கூறும் மதுரைமாநகர் பாண்டிய நாட்டின் தலை நகரமாகும்.

சென்ற காலத்தின் பழுதிலாத் திறனும் எதிர் காலத்தின் சிறப்பும் ஒருங்கே வாய்ந்த பழம்பதி மதுரை. கண்ணுதற் பெருமான் புலவரோடு இருந்து புண்ணியத் தமிழ் ஆய்ந்த ஞானபூமி- சங்கத்தமிழ் மலர்ந்த அருட் சோலை. 'மதிமலி புரிசை மாடக்கூடல்' என்று முழுமுதற் கடவுளே மொழிந்த பெருமைசால் மூதூர். (1) 'மும்மைப் புவனங்களின் மிக்க மூதூர்' என்றும் (2) 'சால்பாய மும்மைத் தமிழ் தங்கிய அங் கண் மூதூர்' என்றும் சேக்கிழார் பெருமான் திருவாய் மொழியச் சிறப்பித்த நகரம். இந்நகரின் அணியாய்ச் "சான்றோர் கவியென" வடபால் ஓடுவது வையை யாறு. இவ்வாற்றின் கரைகளிலே பண்டைய நாளில் முத்தமிழ் மணம் கமழ்ந்தது. அதன் அலைகளிலே தமிழ் ஏடு தவழ்ந்தது. இதனாலன்றோ "தமிழ்கண்ட

---

1, 2, திருத்தொண்டர் புராணம், மூர்த்திநாயனார் 7, 5 பாடல்கள்.

தோர் வையை" என்று புகழ்ந்திசைத்தார் பாரதியார். இவ்வாற்றின் கரையிலேதான் ஆலவாய் அரன் "பண் சுமந்த பாடற்பரிசு பெற மண்சுமந்து" பணி செய்தார். மூர்த்தி, தல, தீர்த்தச் சிறப்புக்களை முறையாகப் பெற்ற ்பதிகளில் சாலச்சிறந்தது மதுரை.

அங்கயற்கண்ணி அம்மையாரும் சொக்கலிங்கப் பெருமானும் கோயில் கொண்டுள்ள ஆலவாய் என்னும் பெயருடைய திருக்கோயில் நகரின் நடுவே அமைந்து விளங்குகிறது. கோயில் நகரமெனவும், விழா நகர மெனவும் சிறப்புக்களை உடையதும் இந்நகரேயாகும். இன்றைய தமிழ் மாநிலத்தில் சென்னைக்கு அடுத்த பெருநகராக மதுரை விளங்குகிறது. இத்தகு சிறப்புக் களை உடைய மதுரையின் தெற்கே 5 கல் தொலைவில் திருப்பரங்குன்றம் அமைந்துள்ளது. மதுரைப் புகை வண்டி நிலயத்திலிருந்து தெற்கே செல்லும் வழியில் பசுமலைக்கு அடுத்த நிலையமாக இவ்வூர் உள்ளது.

நக்கீரர் பாடிய திருமுருகாற்றுப்படையில் "மாட மலிமறுகில் கூடற்குடவயின்" என்று திருப்பரங்குன் றம் மதுரைக்கு மேற்கே இருப்பதாகக் கூறப்பட்டிருக் கிறது. கந்த புராணத்தில் கச்சியப்பரும் 'கூடலின் குடதிசை அமர் பரங்குன்று' என்று குறிப்பிட்டுள் ளார். மதுரைநகரின் கிழ்த்திசையிலிருந்து நோக்கு வார்க்கு பரங்குன்றம் தென்மேற்குத் திசையில் காட்சி யளிப்பதை இன்று காணலாம்.

நகரம் மேற்கே விரிவடைந்துள்ளமையால் பரங் குன்றம் தெற்குத்திசையில் இன்று காணப்படுகிறது.

பாண்டிய நாட்டில் உள்ள *14 சிவத்தலங்களுள் ஒன்று திருப்பரங்குன்றம். சைவ சமய குரவர் நால்வருள் திருஞானசம்பந்தர், சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆகிய இருவருடைய தேவாரத் திருப்பதிகங்களைப் பெற்றது இவ்வூர். இவர்களால் இந்நகர் நன்னகரென்று சிறப்பிக்கப்பட்டது. இங்குள்ள சிவபெருமான் திருப்பெயர் பரங்கிரிநாதர். இறைவியின் திருப்பெயர் ஆவுடையநாயகி. இன்று வழங்கும் பெயர்களோ சொக்கநாதர்—மீனாட்சி. இச்சிவன் கோயில் சந்நிதித் தெருவில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. முருகனை வழிபடச் செல்வோர் முதற்கண் இங்கே வழிபட்டுச் செல்ல வேண்டும் என்பர்.

## முதற்படை வீடு

முருகனுக்குரிய படைவீடுகள் ஆறு. படைவீடு என்பது, பகைவரோடு போர்புரிதற்பொருட்டு ஒருவன் தன் படைகளுடன் தங்கியிருக்கும் இடத்துக்குப் பெயர். முருகப்பெருமான் சூரபன்மனோடு போர் புரியச் செல்லுமுன் தங்கியிருந்த படைவீடுகள் பல உள்ளன.

---

* 1. திருவாலவாய் (மதுரை)
2. திருஏடகம்
3. திருப்பரங்குன்றம்
4. திருஆப்பனூர்
5. திருக்கொடுங்குன்றம் (பிரான்மலை)
6. திருப்புத்தூர்
7. திருப்புனவாயில்
8. திரு இராமேச்சுரம்
9. திரு ஆடானை
10. திருக்காணப்பேர் (காளையார் கோயில்)
11. திருப்பூவனம்
12. திருக்குற்றாலம்
13. திருநெல்வேலி
14. திருச்சுழியல்

அவற்றுள் ஆறுதலங்கள் சிறந்தன என்று கொண்டனர் முன்னோர். **திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய்** (திருச்செந்தூர்), **திருவாவினன்குடி** (பழனி), **திருவேரகம்** (சுவாமிமலை). **குன்றுதோருடல், பழமுதிர்சோலை** என்னும் ஆறும் ஆறுபடைவீடுகளாம்.

ஆறுமுகங்கொண்ட முருகனோடு தொடர்புடைய பொருள்கள் பலவற்றை ஆறுக நினைப்பதில் அன்பர்கள் இன்பங்கண்டனர். நக்கீரர் தாம் அருளிய திருமுருகாற்றுப் படையில் முருகன் உறையும் இடங்களாக ஆறு இடங்களைக் குறிப்பிடுகிறார். இவர் கூறியதிலிருந்தே ஆறுபடைவீடுகள் என்பது வழக்கில் வந்தது.

"ஆறுதிருப் பதியில் வளர் பெருமாளே"
"சகலமும் முதலாகிய அறுபதி நிலைமேவிய
தடமயில் தனிலேறிய பெருமாளே"

என்று திருப்புகழில் அருணகிரிநாதரும்

"ஆறுதிருப் பதிகண்டு ஆறெழுத்தும் அன்பினுடன்
கூறுமவர் சிந்தைகுடி கொண்டோனே."

என்று கந்தர் கலிவெண்பாவில் குமரகுருபரரும் ஆறுபடைவீடுகளை ஆறு திருப்பதி என்றே கூறியுள்ளனர். **கச்சியப்ப சிவாச்சாரியார்** கந்தபுராணத்தில் ஆறுபடைவீடுகளில் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு வணக்கத்தை அமைத்திருக்கிறார்.

இத்தகு சிறப்புக்கள் மலிந்த படைவீடுகளுள் முதலாவதாக விளங்குவது திருப்பரங்குன்றமாகும். பரன்குன்றம் என்பது பரங்குன்றம் என்றாயிற்று. பாடல் பெற்ற சிவபெருமான் திருக்கோயிலும், முருகப்

பெருமான் திருக்கோயிலும் ஆக இரண்டினையும் பெற்ற தனிச்சிறப்பு இவ்வூருக்கு உண்டு.

திருப்பரங்குன்ற மலை, கடல் மட்டத்துக்குமேல் 1050 அடி உயரமுள்ளது. இதனை **திருப்பரங்கிரி, கந்த மாதனம், கந்தமலை, சத்தியகிரி, பரங்குன்றம்** என்றும் அழைப்பர். இம்மலையை சிக்கந்தர் மலையென மகமதியர் கூறுகின்றனர். மலையின்மேல் பள்ளிவாசல் ஒன்று இருக்கின்றது. ஸ்கந்தர் மலையென்பது சிக்கந்தர் மலை என்று மருவியதுபோலும்! திருப்பரங்குன்றத்தின் பெருமைகளை சங்க இலக்கியங்களில் பரக்கக் காண லாம். **தேவாரம், திருப்புகழ், கந்தபுராணம்** முதலிய வற்றிலும் பிற்கால இலக்கியங்களிலும் இப்பதி சிறப் பிக்கப்பட்டுள்ளது. இவ்வூரில் எப்பொழுதும் திருவிழா வின் ஓசை உள்ளது என்று **(1) மதுரைக்காஞ்சியும், சூரபன்மனை** அழித்தபின் முருகன் இக்குன்றின்மேல் விளையாட்டு அயர்கின்ற நிகழ்ச்சியைக் **(2) கலித் தொகை, (3) அகநானூற்றுப் பாடல்கள்** சிறப்பிக்கின் றன. திருமுருகாற்றுப் படையில் நக்கீரர் திருப்பரங் குன்றத்தைக் குன்றுஎன்றே குறிப்பிடுகிறார்.

"கண்போல் மலர்ந்த காமர்சுனைமலர்
அஞ்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும்
குன்றமர்ந்து உறைதலும் உரியன்"

என்பன அவ்வடிகள்.

---

1. "தளிமழை பொழியும் தண் பரங்குன்றில்
கலிகொள் சும்மை" (மதுரைக்காஞ்சி)

2. "ஒன்னுதார்க் கடந்தடூஉமுரவு நீர்மாகொன்ற
வென்வேலான் குன்றின்மேல் விளையாட்டும்
விரும்பார்கொல்" (கலித்தொகை)

3. "சூர்மருங்கறுத்த சுடரிலை நெடுவேல்
சீர்மிகு முருகன் தண்பரங்குன்றம்" (அகநானூறு)

முருகப்பெருமான் இப்பதியில்தான் தேவயானை அம்மையைத் திருமணம் செய்தருளினர். ஆண்டவனின் அருள்முழங்கும் திருத்தலம் திருப்பரங்குன்றம்.

## கோயிலின் அமைப்பு

திருப்பரங்குன்றம் மதுரையை அடுத்து விளங்குவதால் பழங்கால முதற்கொண்டே பெருமையுற்று விளங்குகிறது. முருகப்பெருமான் திருக்கோயில் மலையின் வடபால் அமைந்துள்ளது. ஏறத்தாழ வடமலைப் பகுதியின் பெரும் பகுதி கோயிலைச் சார்ந்தவண்ணம் அமைக்கப்பட்டிருக்கிறது. ஊருக்குள் சென்றதும் முன் பகுதியில் நான்கு தெருக்கள் கூடுமிடத்தில் அழகியதோர் மண்டபம் உள்ளது. அதற்கு மயில் மண்டபம் என்று பெயர். இங்கிருந்து தெற்கு நோக்கி சென்றால் (சில நூறு அடிகள்) கோபுரத்தின் முன்புள்ள மண்டபத்தைக் காணலாம். பத்துப் பெரிய தூண்கள் பல வண்ணங்களுடன் நம்மை வரவேற்கும் முறையில் முன்புறம் அமைந்துள்ளது. அவற்றைக் கண்டு உள்நுழைந்தால் முன்மண்டபத்தை அடையலாம். இதற்கு ஆஸ்தான மண்டபம் எனப்பெயர். இதன் மையத்தில் பதினாறு பெரியதூண்கள் அமைந்துள்ளன. சுற்றிலும் ஐம்பது தூண்கள் உள்ளன. நடுவிலும் சுற்றிலும் உள்ள தூண்களில் அழகிய சிற்ப உருவங்கள் காட்சி தருகின்றன.



1. பசுப் பூசை புரியும் பார்வதி; சந்தியா தாண்டவ உருவம்.

## கோபுரம்

இதைக் கடந்து சென்ருல் கோபுரவாயிலே அடையலாம். இங்குள்ள கோபுரம் சுமார் 150 அடி உயரமுள்ளது. எழுநிலை (மாடம்) களை உடையது. கோபுர வாயிலின் நடுவே கீழ்த்திசை நோக்கி கோபுர விநாயகர் முன்னிருந்து அருள் செய்கின்ருர். கோபுரத்தின் மேற்குத்திசையில் யானைகட்டும் இடம் அமைந்துள்ளது.

கோபுர வாயிலைக் கடந்து சென்ருல் கல்யாண மண்டபத்தை அடையலாம். இம்மண்டபத்தின் முன்புறம் ஏறும்படிகளின் இரு பக்கங்களிலும் தேர் இழுக்கும் இரு பரிகள் உள்ளன. இவை ஒரே கல்லில் செய்யப்பட்டு எழிலுற்று இலங்குகின்றன. அகன்ற இடமுடைய இம்மண்டபத்தே விழா நிகழ்ச்சிகள், சொற்பொழிவுகள், இசையரங்குகள் நிகழ்கின்றன. இதன் கீழ்பால் தீர்த்தக்குளம், ஒடுக்க மண்டபம், நந்தவனம் முதலியன உள்ளன. கல்யாண மண்டபத்திலிருந்து சிலபடிகள் மேலேறிச் சென்ருல் கம்பத்தடி மண்டபம் உள்ளது. அங்கிருந்து மூன்ருவது நிலையாகச் சில படிகள் மேலேறினுல் மகா மண்டபத்தைக் காணலாம். அதன்பின்னர் நான்காவது நிலையாகச் சில படிகள் ஏறினுல் முருகப்பெருமான் வீற்றிருக்கும் அர்த்த மண்டபத்தை அடையலாம்.

இவ்வகையில் முறையே நான்கு பெரிய மண்டபங்களால் அமைந்து படிப் படியாக உயர்ந்து முருகப் பெருமான் கோயில் விளங்குகிறது. கோயிலின் மேற்குப் பக்கங்களில் பல மண்டபங்கள் உள்ளன. கம்பத்தடி மண்டபத்திலிருந்து ஒருவழி மேற்குப் புறமாக

அடிவாரம் வரை அமைந்துள்ளது. விழாக் காலங்களில் சுவாமி வீதி உலாச் செல்வதற்கு இவ்வழி பயன் படுகிறது.

உயர்ந்து உயர்ந்து விளங்கும் மண்டபங்களின் தோற்றமும், ஒரே முறையில் பல படிகளமையாமல் பல முறைகளில் படிகள் அமைத்திருக்கும் பாங்கும் ஆண்டவனிடம் துன்பப்படாமல் அடையும் நெறியைக் காட்டுகின்றன. கோயிலின் அமைப்பு வனப்பு மிகுந்தது. கோயில் பரப்பளவு சுமார் 6 ஏக்கர் உள்ளது.

## மூர்த்திச் சிறப்பு

திருப்பரங்குன்றில் மலையைக் குடைந்து உருவாக்கப்பெற்ற மூர்த்தங்கள் பல உள்ளன. அவற்றுள் மிகச் சிறந்தது முருகப்பெருமான் திருவுருவமாகும். அர்த்த மண்டபத்தில் கற்பக விநாயகர், சத்தியகிரி நாதர், துர்க்காதேவி, பவளக்கனிவாய் பெருமாள் முதலியோர் திருவுருவங்கள் பொலிவுற்று விளங்குகின்றன.

மூலவராகிய முருகப்பெருமான் திருவுருவத்துக்கு மேலே சூரிய சந்திரரும், பக்கங்களில் சித்தவித்யாதரர், நான்முகன், தேவேந்திரன், கலைமகள், நாரதர், தெய்வயானையம்மை முதலியோரது திருவுருவங்களும் உள்ளன, கீழே ஆடு, சேவல், யானை, மயில் முதலிய உருவங்கள் அமைந்துள்ளன. கிழக்குப் பகுதியில் பவளக்கனிவாய் பெருமாள் மேல் திசை நோக்கி

அமர்ந்துள்ளார். அவருக்கு இருபுறமும் சீதேவி, பூதேவி, மதங்க முனிவர் திருவுருவங்கள் உள்ளன. மூலவருக்கு மேல்புறம் வடதிசை நோக்கி துர்க்கா தேவியின் உருவம் உள்ளது. தேவியின் அருகே மகிஷாசூரனின் உருவம் காணப்படுகிறது. அதன் மேல்பால் பூதகணங்கள் சூழ்ந்திருக்க, தேவ தூதர்கள் வாத்தியங்கள் இசைக்க, தாமரை மலரில் அமர்ந்த கற்பக விநாயகர் காட்சி தருகின்றார். இப் பிள்ளையாருக்குப் பாச அங்குசம் கையில் இல்லை. கனியும் கரும்புமே கையில் உள்ளன. இவை இம் மூர்த்திக்குத் தனிச் சிறப்பு என்பர். அதனை அடுத்து கிழக்கு நோக்கி சத்தியகிரீஸ்வரர், சோமாஸ் கந்தர் உருவங்கள் உள்ளன. முருகப்பெருமானுக்கும் ஆங்குள்ள மூர்த்தங்களுக்கும் திருமுழுக்கு (அபிஷேகம்) செய்யப்படுவதில்லை. எண்ணெய்க்காப்பும், புனுகுமே சாத்தப்படுகிறது. முருகன் கையிலுள்ள வேலுக்கே எல்லாவித மான திருமுழுக்காட்டலும் நிகழ்வுற்று வருகிறது.

மகா மண்டபத்திற்கு மேல்புறம் கோவர்த்தனம்பிகையின் தனிக் கோயில் உள்ளது. மகா மண்டபத்தில் உற்சவ மூர்த்தங்கள் பலவுள்ளன. இம் மண்டபத்தின் கீழ்பால் ஆறுமுகப்பெருமான் சந்நிதியுள்ளது. இங்கே பெருமானின் விழா மூர்த்தமும், அறுபத்து மூவர் சிலை உருவங்களும் செந்திலாண்டவன் திருவடியும், சனி பகவானின் தனி உருவமும், அமைந்துள்ளன. இக் கோயிலில் நவக்கிரகங்கள் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

கம்பத்தடி மண்டபத்திலிருந்து மேலேறிச் செல்லும் வாயிலின் கிழக்குப் பக்கத்தில் அதிகார நந்தீசுரர், காலகண்டி அம்மை உருவங்களும், மேற்குப்

பக்கத்தில் இரட்டை விநாயகர் உருவங்களும் உள்ளன.

'வேண்டுவார் வேண்டுவதே ஈபவ'ராகிய முருகப் பெருமானின் மூர்த்தம் தனிச் சிறப்பும், உயர்வும் வாய்ந்தது. நக்கீரர், அருணகிரிநாதர் முதலிய பல அடியார்களுக்கு அருள் ஞானம் தந்துதவிய பெருமை நிறைந்தது. இன்னும் எண்ணற்ற அன்பர்களின் மனக் கருத்தை நிறைவேற்றிக்கொண்டிருக்கும் இம் மூர்த்தியின் கீர்த்தியை யாவரே புகழ வல்லார்?

"நசையுநர்க் கார்த்து மிசைபே ராளஃ" என்ற நக்கீரர் வாய்மொழி பொய்யாகாதன்றே!

## தீர்த்தம்

இத்தலத்திலுள்ள தீர்த்தங்கள் சத்திய கூபம், பிரம கூபம், இலட்சுமி திருக்குளம், சரவணப் பொய்கை முதலியன. இவையனைத்தும் தீர்த்தச் சிறப்பு வாய்ந்தவை. கார்த்திகை தோறும் திரளான மக்கள் இவற்றில் நீராடி மலையை வலம்வந்து முருகனை வழிபடுகின்றனர்.

கோயிலின் அருகேயுள்ள இலட்சுமி திருக்குளம் நல்ல படிக்கட்டுகள் உடையது. மலையில் பெய்யும் மழை நீர் தூய முறையில் இதில் வந்து விழுமாறு செய்துள்ளனர். மலையின் மேல் சரவண தீர்த்தம் காசிச் சுனை என்ற இரண்டு சுனைகள் உள்ளன. இச் சுனைகளில் உள்ள மீன்கள் வனப்பு வாய்ந்தவை. கோயிலுக்குக் கிழக்கே 2 பர்லாங் தூரத்தில் சரவணப்



17. திருமகள் (இலட்சுமி) தீர்த்தம்

பொய்கை இருக்கிறது. இது சுமார் நான்கு ஏக்கர் பரப்பளவு உள்ளது. தென்புறம் மலையும் வடபுறம் நீண்ட படிக்கட்டுகளும் அமைந்து பொய்கைக்கு அழகு செய்கின்றன. பெரும்பாலும் இன்று இப் பொய்கையில்தான் மக்கள் நீராடி வழிபாட்டிற்குச் செல்லுகின்றனர். சன்னியாசித் தீர்த்தம் எனும் கிணறு ஒன்று கோயிலுக்குள் உள்ளது. இத் தீர்த் தமே அபிடேகத்திற்குப் பயன்படுகிறது.

## புராண வரலாறு

புராணம் என்பது பழமை சான்ற வரலாறு. புராணங்கள் பதினெட்டு என்பர். இறைவன் திருக் கோயில் கொண்டருளும் சில தலங்களுக்கும் புராணங் கள் உள்ளன. அவற்றிற்குத் தலபுராணம் எனப் பெயர். இத்தலபுராணம் மக்களிடையே கல்வி, அறிவு, ஒழுக்கங்களை நாளும் வளரச்செய்து இறையருளின் பத்தில் செலுத்தியது என்பதில் ஐயமில்லை. இத் தகைய புராண இலக்கியங்களுள் திருப்பரங்கிரிப் புராணமும் ஒன்று. இவ்வூரின் தெய்வப் பெருமையை இதனால் அறியலாம்.

திருக்கைலாயத்தில் சிவபெருமான் பஞ்சாட்சர மந்திரத்தை உமையம்மையாருக்கு உபதேசித்தார். அதுபோது தாயின் மடிமீதிருந்த குமாரக்கடவுள் அதனைக் கேட்க நேர்ந்தது. மந்திரப் பொருளைக் குரு முகமாக அன்றி மறைவாகக் கேட்டல் குற்றமுடை யது ஆதலால், அவ்வுண்மையை உலகுக்கு அறிவிக் கும் பொருட்டு முருகன் பரங்குன்ற நாதரை வழிபட்டு பாவத்தினின்று நீங்கினார்.

சிபிச்சக்கரவர்த்தி பூமிதானம் செய்கின்றபோது அதனைப் பெறுதற்கு ஒரு ஆள் குறைவுற்றமை கண்டு வருந்தியிருந்தான். பரங்கிரிப் பெருமான் அப்பொழுது வேற்றுருக்கொண்டு அவன்பால் சென்று தான மேற்று அருள் புரிந்தனர்.

மற்றும் படைத்தற்கடவுள் நாமகளை மணம் புரிந்துகொண்டு பரங்குன்றில் பிரம தீர்த்தத்தை உண்டாக்கினுர். சாபத்தால் தொழுநோயுற்ற மன்ன ைெருவன் இத்தீர்த்தத்தில் நீராடிப் பிணி நீங்கி நல முற்றனன். அரிச்சந்திரன் முருகனுக்குத் திருவிழா எடுத்து அவரருளால் விடு பெற்றனன். சங்கத் தலை மைப் புலவராக இருந்த நக்கீரதேவரைத் திருமுரு காற்றுப்படை பாடச் செய்து அவரைச் சிறையினின் றும் முருகன் விடுவித்தருளினுர்.

சூரபன்மாதியரை அழித்து தேவர்களைச் சிறை மீட்டு அவர்களுக்கு வானுலகாட்சி தந்த பின்னர் முருகன் இப்பரங்குன்றத்தை அடைந்தார். இங்கு தான் தேவேந்திரன் மகளாகிய தெய்வயானை அம்மை யைத் திருமணம் புரிந்து, தம்மை வணங்கியவர்கட் கெல்லாம் விரும்பியன அளித்து மணக்கோலத்துடன் எஞ்ஞான்றும் தங்கி அருளுகின்ருர்.

இவ்வரலாறுகள் இத்தலபுராணத்தில் கூறப்பட் டுள்ளன. மற்றும் ஒரு பெண், முருகன் என்ற பெயரை எப்பொழுதும் கூறிவந்தாள். அவள் மேல் ஐயமுற்ற கணவன் அவள் கைகளில் ஒன்றை வெட்டி வீழ்த்தி ஞன். முருகப்பெருமான் திருவருளால் அந்தக் கை மீண்டும் வளரப்பெற்றது இத்தலத்தில்தான் என்று கூறுகின்றனர்.



8. தெய்வயானைத் திருமணக்காட்சி

" ஒரு முருகா என்று என் உள்ளங்குளிர
உவந்துடனே
வருமுருகா என்று வாய் வெருவாநிற்பக்
கையிங்ஙனே
தருமுருகா என்றுதான் புலம்பாநிற்கும் தையல்
முன்னே
திருமுருகாற்றுப் படையுடனேவரும் சேவகனே "

என்ற பாடலும் இவ்வரலாற்றை நினைவுறுத்தும்.

## பலர் புகழ் குன்றம்

திருப்பரங்குன்றத்தின் இயற்கை அழகைப் புகழ்ந்து **திருஞானசம்பந்தர்** தேவாரத்தில் பல இடங்களில் பாடியுள்ளார்.

வளர்பூங் கோங்க மாதவியோடு மல்லிகைக்
குளிர்பூஞ் சாரல் வண்டறைசோலைப்
பரங்குன்றம் "

என்பது அவர் வாக்குகளில் ஒன்று. சுந்தரமூர்த்தி சுவாமிகள் இப்பதிக்கு வந்து பாடிய பதிகம் ஒன்றுண்டு. அப்பதிகத்தின் 11-ஆம் பாடலில்

" முடியால் உலகாண்ட மூவேந்தர் முன்னே
மொழிந்த "

என்ற அடியால் இவருடன் சேர, சோழ, பாண்டிய மன்னர் மூவரும் இத்தலத்திற்கு வந்திருந்து இறைவனை வழிபட்டனர் எனத் தெரிகிறது. மாறவர்மன் அரிகேசரியின் மகன் கோச்சடையன் ரணதீரன் என்பவன். *இவனது ஆட்சிக்காலத்தில்தான் சைவ சமய

---

* பாண்டியர் வரலாறு பக்கம் 46

குரவராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் சேரமான் பெருமாள் நாயனாருடன் மதுரைக்கு வந்தார். இம் மன்னரால் உபசரிக்கப்பெற்றுத் திருப்பரங்கிரிப் பெருமானை வழிபட்டனர். இச் செய்தி பெரிய புராணத்துள்

* "பரமர்திருப் பரங்குன்றில் சென்றுபார்த்
திபரோடும்
புரமெரித்தார் கோயில்வலம் கொண்டுபுகுந்
துள்ளிறைஞ்சிச்
சிரமலிமாலைச்சடையார் திருவடிக்கீழ் ஆட்
செய்யும்
அருமை நினைந்(து) "அஞ்சுதும் "என் றாரூரர்
பாடுவார்"

"கோத்திட்டை" என்றெடுத்துக் கோதில்திருப்
பதிகஇசை
மூர்த்தியார் தமைவணங்கி முக்கோக்க
ளுடன்முன்பே
ஏத்தியவண் டமிழ்மாலை இன்னிசைபா டிப்பரவிச்
சாத்தினார் சங்கரனார் தங்குதிருப் பரங்குன்றில்

இறைவர்திருத் தொண்டுபுரி அருமையினை
இருநிலத்து
முறைபுரியும் முதல்வேந்தர் மூவர்களுங்
கேட்டஞ்சி
மறைமுந்நூல் மணிமார்பின் வன்றொண்டர்
தமைப்பணிந்தார்
... ... ... ... ... ...

என்ற பாடல்களால் சேக்கிழார் பெருமான் விளக்கியுள்ளார்.

---

*திருத்தொண்டர்புராணம், கழறிற்றறிவார் 102, 103, 104.



3. நக்கீரர் திருவுருவம்

# நக்கீரர்

நக்கீரர் பாடியருளிய திருமுருகாற்றுப்படையால் திருப்பரங்குன்றத்தின் மாட்சி மிக்க காட்சிகள் பல வற்றைக் காணலாம். மலையின் அடிவாரத்தே வளமான வயல்கள் உள்ளன; நீர் நிறைந்த பொய்கையுள்ளது; சுனைகளில் பல மலர்கள் நிறைந்துள்ளன; என்பன போன்ற செய்திகள் நக்கீரர் வாக்கால் அறியக்கிடக் கின்றன. மற்றும் ஞாயிற்றின் கதிர்கள் உள் நுழைய முடியாத நெருங்கிய மரங்கள் நிறைந்த சோலை பரங் குன்றில் இருந்ததென்பதும், இடையருது வீழும் அருவி இருந்ததென்பதும் கூறப்பட்டுள்ளது.

இத்தலத்திற்கும் நக்கீரருக்கும் நெருங்கிய தொடர்பு உண்டென்று தல புராணம் கூறுகிறது. நக்கீரர் திருமுருகாற்றுப்படை பாடக் காரணமாக இருந்த ஒரு வரலாறும் அதில் உள்ளது. முருகப் பெருமானின் திருத்தொண்டர்களுள் முதன்மையாக வைத்து எண்ணப்படுபவர் நக்கீரர். இவர் பிறந்து வளர்ந்து வாழ்ந்த ஊர் மதுரை. இவரை மதுரைக் கணக்காயனுர் மகனுர் நக்கீரனுர் என்று நூல்களில் கூறப்பட்டிருக்கிறது. சங்கப் புலவருள் தலைமைப் புல வராக இருந்தவர் என்பர். நக்கீரர் சிறந்த சிவனடி யார் மட்டுமன்றி முருகன் தொண்டராகவும் விளங்கு கிருர்.

“பொய்யற்ற கீரன்” என்று கச்சியப்பர் புகழ் பாடுகிருர், பழுத்தமுது தமிழ்ப்பலகை யிருக்கு மொரு கவிப்புலவன் இசைக்குருகி, வரைக்குகையை இடித்து வழிகாணும் “ என்று அருணகிரிநாதர் போற்றுகிருர்.

நக்கிரர் வரலாற்றைப் பரஞ்சோதி முனிவர் திருவிளை யாடற் புராணத்திலும், பெரும் பற்றப் புலியூர் நம்பி யின் திருவிளையாடற் புராணத்திலும், நிரம்ப அழகிய தேசிகர் திருப்பரங்கிரிப் புராணத்திலும், சிவப்பிரகாச சுவாமிகள் அருளிய சிகாளத்திப் புராணத்திலும் கா ணலாம்.

இவர் திருமுருகாற்றுப்படை பாடுதற்குக் காரண மாக இருந்த வரலாற்றைக் காண்போம். நக்கிரர் பரங் குன்றை அடைந்து சரவணப் பொய்கையில் நீராடி, கரையிலுள்ள ஆலமர நிழலில் அமர்ந்து சிவபூசை மேற்கொண்டார். ஆலிலையொன்று தண்ணீரில் பாதி யும், தரையில் பாதியுமாக விழ்ந்தது. நீரில்விழுந்த பாதி மீனாகவும் நிலத்தில் விழுந்த பாதி பறவையாக வும் மாறி ஒன்றையொன்று இழுத்தது. அதனைப் பார்த்த நக்கிரர், சிவ வழிபாட்டில் வழுவி, அதிசயித்து நின்றார். வழிபாடு தடையுற்றது. இவ்வாறு சிவ வழி பாடு தவறியவர்கள் 999 பேர்களை ஆங்குள்ள பூத மொன்று அம்மலைக்குகையில் அடைத்து வைத்திருந் தது. ஆயிரவர் சேர்ந்ததும் ஒருங்குண்ண விரதம் பூண் டிருந்த அப்பூதத்திற்கு நக்கிரருடன் கணக்குச் சரி யாயிற்று. நக்கிரரைப் பிடித்துக் கொண்டுபோய்க் குகையில் அடைத்துவைத்து நீராடச் சென்றது. அங் குள்ளோர் நக்கிரரைப் பார்த்து "ஆயிரத்தில் ஒன்று குறைவாக இருந்ததால் நாங்கள் இதுகாறும் உயிரு டன் இருந்தோம். நீர் வந்ததால் ஆயிரம்பேர் நிறை வாகி பூதத்திற் கிரையாகப் போகிறோம்" என்னும் கருத்துப்பட, "ஒருகுறை நீக்கவந்தாய்" என்றனர். இதில் மற்றொரு பொருளும் அமைந்திருக்கிறது. திரு

முருகாற்றுப்படை பாடி அவர்களைக் காப்பாற்றியதால் குறை நீங்கிற்று என்பதாம்.

நக்கீரர், அங்குள்ளோர் நிலைமைக்கிரங்கி முருகன் மேல் திருமுருகாற்றுப்படை பாடி வழுத்தினர். குன்றக் குமரனும் வேலால் மலையைப் பிளந்து நக்கீரர் உட்பட அனைவரையும் விடுவித்தருளினர். பூதத்தின் பெயர் கற்கிமுகி, உக்கிரன் அண்டாபரணன் என்று கூறப்படுகிறது.

நக்கீரர் இருந்து பூசை செய்த இடத்தைப் பஞ் சாட்சரப் பாறை என்கின்றனர். முருகன் மலையைக் கீறிய பிளவையும் இப்போது காட்டுகின்றனர்.

நக்கீரரின் உருவச்சிலை ஒன்று கோயிலில் உள்ளது. பங்குனித் திருவிழா ஐந்தாம் நாளில் நக்கீரர் வீதி உலா வரும் காட்சி இன்றும் நிகழ்ந்து வருகிறது.

## பரிபாடலில்

பரிபாடலில் முருகனுக்கு எட்டுப் பாடல்கள் உள் ளன. சிவபெருமானும், திருமாலும், அயனும், ஆதித் தர் பன்னிருவரும், அமரரும் அவுணரும், தெய்வ முனிவரும் பிறரும், முருகனைக் காண மண்ணுலகில் வந்து உறையும் இடம் திருப்பரங்குன்றம் ஆனபடி யால் ‘அது இமயத்தை ஒக்கும்’ என்று கூறப்படுகி றது. மேற்குறித்த அனைவரையும் சிவபெருமான் வீற் றிருக்கும் இமயமலை ஒன்றிலேதான் காணுதற்கியலும்.

அடுத்தாற்போல் திருப்பரங்குன்றில்தான் காண முடியும் என்று நல்லந்துவனார் பாராட்டிக் கூறி யுள்ளார்.

மற்றும் மக்கள் முருகனது பூசைக்கு உரியவற் றையும், காணிக்கைகளையும் கொண்டுவருதாகவும் குறித்துள்ளார். தாம் கருதியது நிறைவேற முருகனைப் பணிந்து இறைஞ்சி வேண்டுகின்ற காட்சியையும், மழை பொய்த்தாலும், அருவி நீர் இடையருமல் விழும் காட்சியையும் இவ்வாசிரியர் பாடலில் காணலாம். நல்லந்துவனார் முருகப்பெருமானிடத்தும் அவன் எழுந் தருளிய பரங்குன்றத்திடத்தும் நிரம்பிய பற்றுக் கொண்டவர். பரங்குன்றின் வாழ்வையே தம் வாழ் வாகக் கருதி உள்ளுருகிப் பாடுகின்றார். இவருக்குப் பரங்குன்றின் மீதிருந்த பற்றைக் கண்ட புலவர் மதுரை மருதனிளநாகனார்

"சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்
சீர்மிகு முருகன் தண்பரங் குன்றத்து
அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை"

என்று பாராட்டியுள்ளார்.

அந்துவனார் பாடல் ஒன்றிலே திருப்பரங்குன்றத் தில் பெய்த மழை மதுரைத் தெருக்களின் வழியாக வந்து வையையில் பாய்ந்ததாக உள்ளது. தாம் கூறு வது மெய் என்பதை உறுதிப்படுத்தப் பரங்குன்றின் மீது ஆணையிட்டுக் கூறுகிறார்.

மக்கள் திருப்பரங்குன்றத்திற்கு வந்து முருக வேளை இசையோடும் தாளத்தோடும் பாடிப் போற்று கிறார்கள். அவர்கள் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை.

அப்போது மேலுலகில் மிக்க இன்பம் பெறலாம் என்று எவரேனும் கூறினால் வேண்டாமென்று மறுத்துவிடுவார்களாம். முருகனைப் பாடி மகிழும் இன்பத்திற்கு நிகரில்லை என்கிறார் *நல்லழிசியார் என்ற சங்கப் புலவர்.

திருப்பரங்குன்றத்தில் அருவி இருந்த செய்தியைப் பரிபாடல் குறிக்கின்றது, அதில் ஆடவரும் மகளிரும் நீராடி மகிழ்ந்தனர். கோயிலைச் சார்ந்த சோலைகளிலே மக்கள் வந்து தங்கி இன்புற்றனர். மணமாகாத பெண்கள் தமக்கு நல்ல கணவர் வாய்க்க வேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். மணமான மகளிர் குழந்தைப் பேறு கருதி வழிபட்டனர். பாண்டிய மன்னன் விழாக் காலங்களில் வந்து வழிபாடு செய்தான். பரிபாடல் 6-ல் பரங்குன்றினைப் "பூந்தாரான் குன்றெனப்" புலவர் குறிப்பிடுகின்றார்.

## அருணகிரிநாதர்

திருப்புகழ் அருளிய அருணகிரிநாதரும் பல வண்ணப்பாக்களால் இப்பதியைப் புகழ்ந்து பாடியுள்ளார். "பொழில் திகழ் திருப்பரங்கிரி" திருப்பரங்கிரி வளநகர்" திங்களும் செங்கதிரும் மங்குலுந் தங்குமுயர் தென்பரங்குன்றம் " கண்டின்கனி சிந்துஞ் சுவை பொங்கும்புனல் தங்கும் பொழில் கந்தங்கொள் பரங்குன்று" என்றெல்லாம் பலவாறு சிறப்பித்துள்ளார். பிற்கால அருட் கவிஞர்கள் பலரும் இப்பதியைப் புகழ்ந்து பாடிய பாடல்கள் பல உள்ளன.

---

* "மாலை மாலை அடியுறை இயைநர்
மேலோர் உறையுளும் வேண்டுநர் யாஅர்?"

## தென்பரங் குன்றம்

தென்பரங்குன்றம் என்பது மலேயின் தெற்குப் புறமுள்ள பகுதியாகும். தென் என்பதற்கு அழகு என்றும் ஒரு பொருள் உண்டு. அப்படியாயின் அழகிய பரங்குன்றம் என்று இப்பதிக்கே சிறப்பாகக் கூறி விடலாம். அருணகிரிநாதரும் "தென்பரங்குன்றிற் பெருமாளே" என்று கூறியுள்ள அடி இதனை வற்புறுத் தக்காணலாம்.

தென்புறப் பகுதி சோலே சூழ்ந்து தண்ணிழல் பரப்பும் அழகியதோர் இடமாக இன்றும் விளங்குகிறது. ஒருகாலத்தில் தென்பரங்குன்றில்தான் முருகனது திருக்கோயில் இருந்ததென்று கூறுகின்றனர். அக்கோயில் பழுதுற்ற பின்னர் வடபுறத்தில் இப்போதுள்ள திருக்கோயில் எழுந்தது என்றும் கூறுவர். பழமையான சிற்றூர் இருந்ததற்குரிய அறிகுறிகளும் அங்கு காணப்படுகின்றன.

தென்புறமலேயின் கீழ்ப்பகுதியில் மலேயைக் குடைந்து செய்யப்பெற்ற மண்டபமும் சிற்பங்களும் உள்ளன. இதனைச் சமணக்குகை என்பர். இதனுள் உமையாண்டவன் (அர்த்தநாரி) திருவுருவம் உள்ளது. ஆனல் இன்று இது ஊமையாண்டவன் என மருவி வழங்கப்படுகிறது. இதன் வலதுபுறம் பஞ்சமுக கணபதி உருவமும், வயிரவர் உருவமும், இடதுபுறம் ஆறுமுகனின் உருவமும் உள்ளன. இக்குகையின் மேற்குப்பகுதியில் நடராசரின் அழகிய திருவுருவம் உள்ளது. இவ்வுருவத்தின் கீழ்ப்பாகமுள்ள கைகள் சிதைவுற்றுள்ளன. மலேயைக்குடைந்து செய்யப் பற்ற இச்



தென்பரங்குன்றக் குகை



மலைத்தோற்றம்

சிலைகளனைத்தும் மிகவும் நேர்த்தியானவை. மண்டபமும் குடைந்தே செய்யப்பெற்றுள்ளது. இவை பல்லவர்களால் குடையப் பெற்றவையாகும். குகையின் உட்பகுதியில் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன.

இதனைச் சென்று காண்பதற்கு நல்லதொரு வழியைக் கோயிலார் அமைத்திருக்கின்றனர். இரும்புக் கம்பிகள் அமைத்து அவ்விடம் பாதுகாக்கப்பட்டு வருகிறது. இது இப்போது மத்திய அரசாங்கச் சிற்பக் கலைப் பாதுகாப்புக் குழுவினரின் பொறுப்பில் பழமைச் சின்னமாகக் கண்காணிக்கப்பட்டு வருகின்றது. இக் குகைக் கோயில்கண்டு மகிழவேண்டிய இடங்களில் ஒன்றாகும்.

## மேற்குப்புறக் குகை

மலையின் மேற்குப் பகுதியில் புகைவண்டி நிலையத்தின் கீழ்பால் நடுமலை வரை ஏறிச் செல்ல சிறிய படிக்கட்டுகள் செங்குத்தான பாறையில் அமைந்துள்ளன. இதன் உயரம் சுமார் 300 அடியாகும். இவ்வழி ஏறிச்சென்றால் முடிவில் ஒரு குகையையும் அதற்குள் ஆறு கற்படுக்கைகளையும் காணலாம். ஏறிச்செல்ல படிகள் இருப்பினும் ஏறுவது கடினமாகவே இருக்கும். இக்குகையிற் பல ஆட்கள் தங்க இடம் உண்டு. சமண முனிவர்கள் இங்கு தங்கியிருந்தனர் எனக் கூறுவர். இந்குகையில் கி. மு. 3-ம் நூற்றாண்டில் பொறிக்கப்பட்ட பிராமி எழுத்துச் சாசனம்[@] இருக்

@ EP. Rep 333 of 1908.

கிறது. பஞ்சபாண்டவர் குகை என்று இக்குகையை இதுபோது கூறுகின்றனர். இதுவும் மேற்குறித்த பாதுகாப்புக் குழிவினர் பொறுப்பிலேயே உள்ளது.

## மலையின் மேல்

திருப்பரங்குன்றமலை கடல் மட்டத்திற்கு மேல் 1050 அடி உயரமுள்ளது. மலைமேல் ஏறிச் செல்லத் தனி வழி ஒன்றுள்ளது. மலையடிவாரத்தில் பழனி யாண்டவர் கோயில் இருக்கிறது. பழங்காலத்தில் மரங்களடர்ந்திருந்ததாகக் கூறப்படும் இம்மலையில் இன்று மரங்கள் அரிதாகவே காணப்படுகின்றன. படிகள் சில இடங்களில் வசதியாக அமைக்கப்பட்டிருக்கின்றன. உச்சியில் காசிவிசுவநாதர் கோயில் உள்ளது. இதற்கருகே அழகிய சுனையொன்றிருக்கிறது. இதனைக் காசிச் சுனை என்பர்.

மலை உச்சியில் முகமதியர் வழிபடும் சிக்கந்தர் பள்ளிவாசல் இருக்கிறது. முகம்மதியர் ஆட்சியின் போது, சித்தர் அடக்கமான இவ்விடத்தைக் கைக்கொண்டு இப்பெயரிட்டனர் எனக் கூறுகின்றனர், சிக்கந்தர் மசூதிக்கு மேற்கே நூறு கெஜத்துக்கப்பால் சிறு குகை ஒன்றிருக்கிறது. இக்குகையில் கிழக்கு மேற்காகக் குறுகிய ஐந்து படுக்கைகள் கல்லில் செதுக்கப்பட்டுள்ளன.* மலையின் மேல் வில்வம், இச்சி முதலிய மரங்கள் உள்ளன.

---

* Ep. Rep. 1909. P. 68. 69.



25. மலையேறும் முன் உள்ள மண்டபம்

மூலவராகிய ஆண்டவன் திருக்கையில் இருக்கும் வேலை, ஆண்டிற்கு ஒரு முறை மலைமேல் கொண்டு சென்று விழா நிகழ்த்துகின்றனர். இவ்விழா புரட்டாசித் திங்கள் நவராத்திரிக்கு முன்னர் நிகழும். அன்று "மலைமேல் குமரனை" அன்பர்கள் சென்று வணங்கி வருவர். உலகமெலாம் வாழ மழை பெய்ய வேண்டுமன்றோ! அத்தகைய மழை பெய்வதற்காக இவ்வாறு "வேல் மலைக்குச் செல்லும் விழா நிகழ் கின்றதென்பர். நக்கீரரைக் குகையிலிருந்து காப் பாற்றச் செல்லுவதாகவும் பழைய மரபின்படி கூறு கின்றனர்.

## ஓவியங்கள்

பண்டைத் தமிழ் மக்கள் ஓவியக் கலையிலும் வல் லுநராய் வாழ்ந்தனர். பரங்குன்றத்தில் ஒரு ஓவியச் சாலை இருந்ததென்று கூறப்பட்டுள்ளது. "எழு தெழில் அம்பலம் என" அவ்வோவியச்சாலை பெயர் பெற்றிருந்ததென்று தெரிகிறது. இதனை எழுத்து நிலை மண்டபம் என்றும் கூறுவர். இதில் பல ஓவியங் கள் தீட்டப்பட்ட பல மண்டபங்கள் இருந்தன. அம் மண்டபங்கள் சிறந்த மூங்கில்களையும் விரிந்த பாறை களையும் உடைய அகன்ற இடத்தே கட்டப்பட்டிருந் தன. 1 அம்மண்டபத்துள் ஒன்று கோயிலுக்குக் கீழ் பால் சரவணப் பொய்கைக்குச் செல்லும் வழியில் பழுதுற்ற நிலையில் இன்று காணப்படுகிறது. எழுத்து மண்டபம் என இதனைக் கூறுகின்றனர். முன்பு நல்ல வண்ணங்களைக் கொண்டு எழுதிய ஓவியங்கள் பல

1 இன்ன பலபல எழுத்து நிலை மண்டபம்—பரிபாடல் (19)

இருந்தன என்பதற்கு இதுவே சான்ருக நிற்கின்றது. இதில் துருவச் சக்கரம், சூரியன் முதலான கிரகங்கள் காமன், இரதி, அகலிகை இவர்களது அழகிய உருவ ஓவியங்கள் இருந்தன. அழகொழுகும் அவ்வம்பலம் காமவேளின் ஆயுதச் சாலையைப் போன்றதாகும். 1

முருகவேளை வழிபடச் செல்வோர் இச்சித்திரச் சாலையையும் கண்டு மகிழ்ந்தனர். இவற்றைப் போன்ற பல செய்திகளைப் பரிபாடலால் அறியலாம். இன்று மகா மண்டபத்தின் மேலே பல வண்ணங்களு டன் எழுதப்பட்டுள்ள வட்டச் சித்திர அமைப்புகளைக் காணலாம். இவை சிறந்த வேலைப்பாடு மிக்கவை.

## சிற்பங்கள்

இங்கு மலையைக் குடைந்தும் தனித்தும் செய்யப் பெற்ற சிற்பங்கள் பலவுள்ளன. கோயில் முழுவதும் உள்ள மண்டபங்களின் கற்றூண்கள் சிற்பங்கள் மிகுந்த அற்புத வேலைப்பாடுடையவை. முன் மண்ட பத்தில் உள்ள தெய்வயானைத் திருமணக் காட்சி, அர்த்த மண்டபத்தில் குடைந்து செதுக்கப்பட்ட உரு வங்கள், கற்றூண்களில் உள்ள திருமலை நாயக்கர், மங்கம்மாள் உருவச் சிலைகள் சிறப்பாக விளங்கு கின்றன.

அர்த்த மண்டபத்திலிருந்து மேல்புறம் கிழிறங் கும் இடத்தில் உள்ள குகையில் அன்னபூரணியின்

---

1 எழுதெழில் அம்பலம் காமவேள் அம்பின்
தொழில் வீற்றிருந்த நகர் — (பரிபாடல்- 18)

அழகுருவம் இருக்கிறது. பெருமாள் இருக்கையின் வலதுபுறச் சுவரில் குடைந்து செய்யப்பட்ட பாற் கடல் மீதுள்ள திருமால், வராகவதாரம், நரசிங்காவ தாரம் முதலிய உருவங்கள் உள்ளன. இதன் கீழ்பால் உள்ள குகையில் மகாலட்சுமியின் உருவச்சிலை உள் ளது. இதற்குள் இப்பொழுது கருவூலம் வைக்கப்பட் டுள்ளது. சத்தியகிரிநாதர் இருப்பிற்கு இடதுபுறச் சுவரில் பசுப் பூசை செய்யும் பார்வதி, குழல் முழவு இசைக்கும் பூதகணங்கள், சந்தியா தாண்டவ உருவம் முதலிய சிற்பங்கள் உள்ளன. சந்நிதி முன்பாகத் தூண்களில் திருமலை நாயக்கர், அவர் மனைவியர், அமைச்சர் முதலியோர் உருவங்கள் கூப்பிய கைகளு டன் காட்சி தருகின்றன.

மேலிருந்து கம்பத்தடி மண்டபத்திற்கு இறங் கும் வழியில் குகை ஒன்றுள்ளது. அதனுள் கலைக் கோட்டு முனிவரின் உருவொன்று பொலிந்து காணப் படுகின்றது. இம் மண்டபத்தின் முன் பகுதியில் அண்டத்தை அணியாகக் கொண்ட அண்டாபரணர், இத்தலத்தில் தவஞ்செய்து முத்தி எய்திய பராசலர், வேதவியாசர், உக்கிரமூர்த்தி முதலியவர்களின் உரு வங்கள் உள்ளன. மேல் தளத்தில் இரட்டை விநாயகர் உள்ளனர். மண்டபம் நடுவில் நந்தி, மயில், மூஷிகம் முதலியவற்றின் பேருருவங்கள் மிளிர்கின்றன. இம் மண்டபம் மிகப் பழமையானதென்பதை அங்குள்ள தூண்களே காட்டுகின்றன. இம்மண்டபத்தில்தான் சுவாமிக்கு அலங்காரம் செய்யுமிடம் அமைந்துள்ளது.

திருமண மண்டபத்தில் மிகுதியான தூண்கள் இருப்பினும் சிற்பங்கள் குறைவாகவே உள்ளன. மூன்

மண்டபத்தில் சுமார் 66 தூண்கள் உள்ளன. மையத்தில் பரப்பாக உள்ள 16 தூண்களில் அரிய வேலைப்பாடுமிக்க சிற்பங்கள் உள்ளன. அவற்றுள் சிறந்தவை முருகன் தெய்வயானைத் திருமணக் கோலம். எதிரே உள்ள இராணி மங்கம்மாள் உருவம், அருகே வாளுடன் நிற்கும் மீனுட்சி நாயக்கர் உருவம், வீரவாகு, துர்க்கை, பத்ரகாளி, நடராஜர் உருவங்கள் சிறந்தவை. இம்மண்டபத்தின் கீழ்பால் கறுப்பண்ணசாமி கோயிலும், மேல்பால் மலர் விற்கும் கடைகளும் அமைந்துள்ளன. முன்பாக இருபுறமும் இரு பெரிய இரத விரர்கள் காட்சியளிக்கின்றனர். அதை அடுத்து யாளிகள் நான்கும், குதிரைகள் நான்கும் வடதிசை நோக்கி நம்மை வரவேற்கும் நிலையில் அமைந்திருக்கின்றன. மண்டபத்தின் மேல் தளத்தில் பல உருவங்கள் சுதைவேலையுடன் தலபுராணக் காட்சிகளை நினைவுறுத்தும் வகையில் அமைக்கப்பட்டுள்ளன. தெய்வயானைத் திருமணம், மீனுட்சி திருமணம், ஊர்த்தவ தாண்டவம், அகத்தியர், பிரமன், திருமால், நாரதர், தேவமாதர்கள் முதலிய சாந்து உருவங்கள் இவற்றுள் சிறந்தவை.

## திருப்பணி செய்தவர்கள்

இக்கோயிலில் முறையாகத் திருப்பணி செய்தவர்கள் பலர். புராணத்தில் புரூரவசு, மான்தாதா, நளச் சக்கரவர்த்தி, அரிச்சந்திரன் முதலியோர் பணிபுரிந்ததாகக் கூறப்பட்டுள்ளது. பிற்காலத்தில் பாண்டிய



திருமலை நாயக்கர்



அமைச்சர்

மன்னர்களும் நாயக்கர் மரபினரும் திருப்பணி செய்துள்ளனர். அவருள் பாண்டியன் மாறஞ்சடையன், சுந்தரபாண்டியன், வீரப்ப நாயக்கர், திருமலை நாயக்கர் சிறந்தோராவர்.

வைத்திய குலத்தில் பிறந்த சாத்தன் என்பவனுடைய மகன் கணபதி என்பவன். இவன் பராந்தகப் பாண்டியனது ஆட்சியில் படைத்தலைவனாக விளங்கியவன். இவ்வேந்தனால் 'பாண்டி அமிர்த மங்கல வரையன்' என்ற பட்டம் பெற்றவன். இவன் திருப்பரங்குன்றத்திலுள்ள கோயிலுக்குத் திருப்பணி புரிந்து அங்குள்ள திருக்குளத்தையும் திருத்தி அறச் செயல்களையும் ஒழுங்கு படுத்தினான் என்று இங்குள்ள கல்வெட்டு* ஒன்றால் அறியக்கிடக்கின்றது.

## சமயப் பணி

விழா நாட்களிலும், சிறந்த நாட்களிலும் தக்க அறிஞர்களைக் கொண்டு சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்தப் பெறுகின்றன. அருந்தமிழ் இன்னிசைப் பாடல்களை ஆண்டவன் சந்நிதியில் காலை மாலை வேளைகளில் பாட ஓதுவாரைத் தேவஸ்தானத்தார் அமர்த்தியிருக்கின்றனர். ஓதுவார் தம் குழுவினருடன், விழாக் காலங்களிலும் தேவாரம், திருவாசகம், திருப்புகழ் முதலிய பாடல்களை ஓதிக்கொண்டு சுவாமி திருவீதி உலா வரும்போது வருகின்றனர். தற்போது திரு. ஆதிமூலம் பிள்ளை அவர்கள் ஓதுவாராகப் பணிபுரிந்து வருகிறார். சிறுவர் சிறுமிகள் பலருக்கு இன்னிசைப் பாட்டல்களை முறையாகப் பயிற்றி வருகின்றார்.

---

* Indian Antiquary, Vol. XXII. P. 67.

மூர்த்திகளுடைய திருப்பெயர்களை அவ்வவ்விடங்களில் கோயிலார் குறித்துள்ளனர். இந்து மத அறநிலையப் பாதுகாப்புத்துறை ஆணையாளர் **திரு. அ. உத்தண்டராம பிள்ளை ஐ. ஏ. எஸ்.** அவர்களால் **14-6-1959** ஆம் நாளன்று திருஞானசம்பந்தர் அருளிய திருப்பரங்குன்றத் தேவாரம் **11** பாடல்களைக் கொண்ட கல்வெட்டு ஒன்றும், நடராசப் பெருமான் சந்நதியில் திருமுறைக் கோயிலும் திறந்து வைக்கப் பெற்றுள்ளன. இப்பணி காலத்திற் கேற்ற சிறப்புறு சமயப் பணியாகும்.

## மின் விளக்கு

இத்திருக்கோயில் அனைத்தும் மின் விளக்குகள் மிளிர்ந்து அழகு செய்கின்றன. மலையின் நடுவிலும், மண்டபங்களின் முன்பும் "ஓம்" என்றும் "முருகா" என்றும் பொறிக்கப் பெற்ற விளக்குகள் காட்சியளிக்கின்றன. கோபுரத்தின் மேல் மாடங்கள் தோறும் மின் விளக்குகள் பொலிகின்றன. கீழிருந்து மலை உச்சி வரையில் விளக்குகள் போடப்பட்டுள்ளன. உச்சியில் பெரிய ரசமின் விளக்கு உள்ளது. இது சுமார் 30 கல் சுற்றளவில் உள்ள எல்லாக் கிராமங்களுக்கும் காட்சி தருகின்றது. அவ்வக் கிராமங்களிலிருந்தே மக்கள் இவ்விளக்கினைக் கண்டு முருகப் பெருமானை மனத்தில் கொண்டு வழிபட வாய்ப்பாக அமைந்திருக்கிறது. இதனை அமைத்து உதவியவர் போடிநாயக்கனூர் பெருநிலக்கிழார் திரு. ஏ. எஸ். சுப்பராஜு அவர்களாவார்.

## சுற்றுக் கோயில்கள்

ஊரின் நடுவே பாடல் பெற்ற சிவன்கோயில் இருக்கிறது. வெயிலுகந்த அம்மன் கோயில் என்ருெரு தேவி கோயிலுமுண்டு. இது ஏரிக்கரையில் உள்ளது. மாசித்திங்கள் முழுநிலவையடுத்து இதற்கு விழா நடக்கிறது. பேரருள் வழங்கும் பெருமை இத் தேவி யாருக்கு உண்டு. இதன் உத்சவ மூர்த்தி முருகன் கோயிலில் உள்ளது. இதற்குப் பத்துநாட்கள் விழா உண்டு. மேலரத வீதியில் பாம்பாளம்மன் கோயில் இருக்கிறது. விஷக்கடியுண்டவர் இக்கோயிலை வலம் வந்து தீர்த்தம் குடித்து நலமுறுகின்ற நிகழ்ச்சி இன்றும் உள்ளது.

கீழரத வீதியில் குருநாதன் கோயில் இருக்கிறது. மாசித்திங்கள் சிவராத்திரியின்போது பாரி வேட்டை விழா இங்கு நடக்கின்றது. மலைக்குக் கிழக்கே பேச்சியம்மன் கோயில் உள்ளது. மலைக்குப் போகும் வழியில் அடிவாரத்துவக்கத்தில் பழனி ஆண்டவர் கோயில் இருக்கிறது. மொட்டையரசு அருகிலுள்ள கூடுகட்டிப் பறம்பில் பழனி ஆண்டவர் கோயில் ஒன்று உள்ளது. இதற்கும் சிறப்பாக ஆண்டிற்கொரு முறை விழா நிகழ்கிறது.



## * கல்வெட்டு வரலாறு

இத்திருக் கோயிலில், பாண்டிய மன்னர்களில் பாண்டியன் மாறஞ்சடையன், சோணாடு கொண்ட சுந்தரபாண்டியன், எம்மண்டலமும் கொண்டருளிய திரிபுவனச் சக்கரவர்த்தி கோனேரின்மைகொண்டான் காலங்களிலும், விசய நகர வேந்தரில் வரதப்ப நாயக்கர் காலத்திலும் பொறிக்கப் பெற்ற கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

இவைகளுள் பாண்டியன் மாறஞ்சடையன் காலத்துக் கல்வெட்டு இம்மன்னனுடைய மகா சாமந்தனும், கரவந்தபுரம் என்னும் ஊரினனும், பாண்டி அமிர்த மங்கலத்துத் தலைவனும் ஆகிய சாத்தன் கணபதி என்பான் முருகப்பெருமான் கோயிலையும், ஸ்ரீ தடாகத்தையும் பழுது பார்த்ததையும், அவனுடைய மனைவியார் நக்கன் கொற்றை என்பார், துர்க்கா தேவிக்கும், ஜேஷ்டைக்கும் (இலக்குமியின் தமக்கையார்க்கும்) கோயில் கட்டியதையும்; திரிபுவனச்சக்கரவர்த்தி சோணாடு கொண்ட சுந்தரபாண்டியன் முருகப் பெருமானுக்கு நில நிவந்தம் அளித்ததையும், சோணாடு வழங்கிய சுந்தரபாண்டியன் காலத்துக் கல்வெட்டு,

இராவளர் பிரசன்ன தேவர் திருப்பரங்குன்றத்துத் தென்பாகத்துக்கு உட்பக்கத்தில் எழுந்தருளுவித்த

---

* See the Annual reportson South Indian Epigraphy for the years. 1890-No 49, 1908-No 37, 1917-No 860-861, 1918-No 336-339.
and the text Published in 1890-No 49, South Indian Inseription Vol, IV Number 372.
1908-No 37 Indian. Anti-Vol. XXII Page 67.

சுந்தரபாண்டிய ஈஸ்வர முடையார்க்கு, வேண்டும் நிவந்தங்களுக்கும் திருப்பணிக்கும், வீர நாராயணக் குளக்கீழ் புளிங்குன்றூரான சுந்தர பாண்டியபுரத்து கண்டுழவான நிலத்திலே ஒருபக்கமடைய மலைக் குடிக்கோலால் பெரும்பூவும் குறுவையும் விளையும் நிலத்திலே ஆறு மாவும் ஆக அரையே இரண்டு மாவை மழவராயனுடைய வேண்டுகோளின்படி, அரசன் அளித்துள்ளதையும்;

எம்மண்டலமும் கொண்டருளிய திரிபுவனச் சக்கரவர்த்தி குலசேகர தேவர் காலத்துக் கல்வெட்டு, திருப்பரங்குன்றமுடைய நாயனூர் கோயிலின் திருக்காமக்கோட்டத்து ஆளுடை நாச்சியார்க்கு, ஸ்ரீ வல்லப சதுர்வேதி மங்கலத்தார் நில நிவந்தம் செய்ததையும்;

வீரப்பநாயக்கர் காலத்தில் ( சகம் 1593 அதாவது கி. பி. 1671 ) அவ்வீரப்பநாயக்கர் சேது ஸ்நானம் செய்து திரும்பி வருகையில் பரங்குன்றத்து முருகப்பெருமானுக்குத் தங்கப் பல்லக்கும், முருகப் பெருமானுக்குக் கார்த்திகை பௌர்ணமை நாளில் திருவமுதுக்கும் நிவந்தம் செய்ததையும் குறிப்பிடுகின்றன. இவையன்றி இக்கோயிலிலுள்ள கல்வெட்டொன்றில் காணப்படும் செய்தி குறிப்பிடத்தக்கதாயிருக்கிறது.

சாலிவாகன சகாப்தம் 1714-ல் ஐரோப்பிய சேனையொன்று மதுரைச் சொக்கநாதர் கோயிலையும், பழனியாண்டவர் கோயிலையும் பல இடங்களைப் பாழ்படுத்தியது. அதன் பின்னர் அச்சேனை திருப்பரங்குன்றக் கோயில் முன் மண்டபத்தை அடைந்து கல்யாண

மண்டபத்தை அடைய முயற்சித்தது. அச்சமயம் பட்டர்கள் ஒன்றுசேர்ந்து குட்டியென்ற ஒருவரைக் கோபுரத்திலேறி கீழே குதிக்குமாறு செய்தனர். அவரும் அவ்வாறே செய்ய அதைக்கண்ட வெள்ளையர்கள் அஞ்சி திரும்பிவிட்டனர். அவனது வீரச் செயலுக்காக அவன் பெயரால் இறையிலியாக (வரியின்றி) நிலங்கள் அளிக்கப்பெற்றன.

---



20. சரவணப் பொய்கை.

இக்கோயில் கல்வெட்டின் மூலம் ஒன்றின் ஒருபகுதி. (தென் இந்தியக் கல்வெட்டுத் தொகுதி 4 எண். 372-லிருந்து எழுதப் பெற்றது )

## மாறவர்மன் சுந்தரபாண்டியன் 1 மெய்க்கீர்த்தி

பூமருவிய திருமடந்தையும் புவிமடந்தையும் புயத்திருப்ப
நாமருவிய கலைமடந்தையும் சயமடந்தையு நலஞ்சிறப்பக்
கோளார்ந்த சினப்புலியுங்
கொடுஞ்சிலையுங் குலைந்தொளிப்ப
வாளார்ந்த பொற்கிரிமேல் வரிக்கயல்கள் விளையாட
இருங்கடல் வலயத் தினிதறம் பெருகக்
கருங்கலி கடிந்து செங்கோல் நடப்ப
ஒருகுடை நீழ லிருநிலங் குளிர
மூவகைத் தமிழு முறைமையின் விளங்க
நால்வகை வேதமு நவின்றுடன் வளர
ஐவகை வேள்வியுஞ் செய்வினை யியற்ற
அறுவகைச் சமயமு மழகுடன் றிகழ
ஏழுவகைப் பாடலு மியலுடன் பரவ
எண்டிசை யளவுஞ் சக்கரஞ் செல்லக்
கொங்கணர் கலிங்கர் கோசலர் மாளுவர்
சிங்களர் தெலுங்கர் சினர் குச்சரர்
வில்லவர் மாகதர் விக்கலர் செம்பியர்
பல்லவர் முதலிய பார்த்திவ ரெல்லாம்
உறைவிட மருளென வொருவர்மு னொருவர்
முறைமுறை கடவதந் திரைகொணர்ந் திறைஞ்ச
இலங்கொளி மணிமுடி யிந்திரன் பூட்டிய
பொலங்கதி ரார மார்பினிற் பொலியப்
பனிமலர்த் தாமரைத் திசைமுகன் படைத்த

மனுநெறி தழைப்ப மணிமுடி சூடிப்
பொன்னிரும் நாட்டிற் புலியாணை போயகலக்
கன்னிரும் நாட்டிற் கயலாணை கைவளர
வெஞ்சின விவுளியும் வேழமும் பரப்பித்
தஞ்சையு முறந்தையுஞ் செந்தழல் கொளுத்திக்
காவியு நீலமு நின்று கவினிழப்ப
வாவியு மாறு மணிநீர் நலனழித்துக்
கூடமு மாமதிலுக் கோபுரமு மாடரங்கும்
மாடமு மாளிகையு மண்டபமும் பலவடித்துத்
தொழுதுவந் தடையா நிருபர்தந் தோகையர்
அழுத கண்ணி ராறு பரப்பிக்
கழுதைகொண் டுழுது கவடி வித்திச்
செம்பியனைச் சினமிரியப் பொருதுசுரம் புகவோட்டிப்
பைம்பொன் முடிபரித்துப் பாணனுக்குக் கொடுத்தருளிப்
பாடருஞ் சிறப்பிற் பகுதி வான்றோய்
ஆடகப் புரிசை யாயிரத் தளியிற்
சோழ வளவ னபிஷேக மண்டபத்து
விராபி ஷேகஞ் செய்து புகழ்விரித்து
நாளும் பரராசர் நாமத் தலைபிடுங்கி
மீளுந் தறுகண் மதயானை மேற்கொண்டு
நீராழி வைய முழுதும் பொதுவொழித்துக்
கூராழியுஞ் செய்ய தோளுமே கொண்டுபோய்
ஐயப் படாத வருமறைதே ரந்தணர்வாழ்
தெய்வப் புலியூர்த் திருவெல்லை யுட்புக்குப்
பொன்னம் பலம்பொலிய வாடுவார் பூவையுடன்
மன்னுந் திருமேனி கண்டு மனங்களித்துக்
கோல மலர்மே லயனுங் குளிர்துழாய்
மாலு மறியா மலர்ச்சே வடிவணங்கி
வாங்குசிறை யன்னந் துயிலொழிய வண்டெழுப்பும்
பூங்கமல வாவிசூழ் பொன்னமரா வதியில்
ஒத்துலகந் தாங்கு முயர்மேருவைக் கொணர்ந்து
வைத்தனைய சோதி மணிமன் டபத்திருந்து
சோலை மலிபழனச் சோணாடுந் தானிழந்த
மாலை முடியுந் தரவருக வென்றழைப்ப
மான நிலைகுலைய வாழ் நகரிக் கபபுறத்துப்

போன வளவ னுரிமை யொடும்புகுந்து
பெற்ற புதல்வினின் பேரென்று முன்காட்டி
வெற்றி யரியணைக்கீழ் விழ்ந்து தொழுதிரப்ப
தானேடி முன்னிகழ்ந்த தன்மையெலாங் கையலகத்
தானே தகம்பண்ணித் தண்டார் முடியுடனே
விட்ட புகலிடந்தன் மாளிகைக் குத்திரிய
விட்டபடிக்கென்று மிதுபிடிபா டாகவெனப்
பொங்குதிரை ஞாலத்துப் பூபாலர் தோள்விளங்குஞ்
செங்கயல்கொண் டுன்றுந் திருமுகமும் பண்டிழந்த
சோள பதியென்னு நாமமுந் தொன்னகரும்
மீள வழங்கி விடைகொடுத்து விட்டருளி



## வாகனங்கள்

---

1. தங்கக் குதிரை
2. தங்க மயில்
3. தங்கச் சப்பரம்
4. தங்க ரிஷபம்
5. வெள்ளி சிம்மாசனம்
6. வெள்ளி யானை
7. வெள்ளி ஆட்டுக்கிடா
8. ஆனந்தராயர் தந்த பல்லக்கு

## நாள் பூஜை

---

| | | | மணி |
|---|---|---|---|
| திருவனந்தல் | ... | காலை | 5-30-6 |
| விழா பூஜை | ... | ,, | 7-30-8 |
| | | ,, | 8 -8-30 |
| காலசந்தி | ... | ,, | 10-45-11 |
| உச்சிக்காலம் | ... | ,, | 11-30-12 |
| சாயரக்ஷை | ... | மாலை | 5-20- 6 |
| அர்த்த சாமம் | ... | ,, | 9- 9-45 |
| பள்ளியறை | ... | ,, | 9-45-10 |



மயில் வாகனம்



வாகனங்கள்

# திருவிழாக்கள் விவரம்

| மாதம் | காலம் | விழாக்கள் |
|---|---|---|
| வைகாசி | 9 நாட்கள் | வசந்த உற்சவம் |
| | 10ஆம் நாள் | விசாகம்—பாலாபிஷேகம் |
| | 11 .. | மொட்டை அரசு உற்சவம் |
| ஆனி | 10 நாட்கள் | ஊஞ்சல் திருவிழா |
| புரட்டாசி | 9 ,, | நவராத்திரி விழா |
| ஐப்பசி | 7 ,, | கந்தர் சஷ்டிவிழா |
| | | 6ஆம்நாள் இரவு-சூரசங்காரம் |
| | | 7ஆம்நாள் பாவாடை |
| கார்த்திகை | 10 நாட்கள் | திருக்கார்த்திகை உற்சவம் |
| | | 8ஆம்நாள்-பட்டாபிஷேகம் |
| | | 9ஆம்நாள்-சிறிய வைரத்தேர் விழா |
| தை | 10 நாட்கள் | தெப்பத்திருவிழா |
| | | 9ஆம்நாள்-சிறிய வைரத்தேர் விழா |
| | | 10ஆம் .. -தெப்பம், இரவு சூரசங்காரம் |
| பங்குனி | 14 நாட்கள் | பெருந்திருவிழா (பிர்மோற்சவம்) |
| | | 5ஆம்நாள்-நக்கீரர் யாகம் |
| | | 6ம் ,, சைவ சமய நிறுவன விழா |
| | | 10 ,, சூரசங்கார விழா |
| | | 11 .. பட்டாபிஷேகம் |
| | | 12 ,, திருக்கல்யாணம் |
| | | 13 ,, பெரிய தேர் உலா விழா (மலையைச்சுற்றி) |

## ஆட்சிக் குழு

இக்கோயில் ஆளுகை சென்னை, இந்து சமய அற நிலையப் பாதுகாப்புத் துறைக்கு உட்பட்டது. மதுரை மீனாட்சி சுந்தரர் தேவஸ்தானத்தைச் சேர்ந்தது.

உயர்திரு. **அ. உத்தண்டராம பிள்ளை** B. A. L., I. A. S. அவர்கள் சென்னைமாநில அறநிலைய ஆணையாளர்.

உயர்திரு. **R. கிருஷ்ணசாமி பிள்ளை** B.A., B.L. அவர்கள் இறைபணியாளர் [ Executive Officer ].

இக்கோயிலுக்குத் தர்மகர்த்தாக் குழு ஒன்று அமைக்கப்பட்டிருக்கிறது. இவற்றில் ஐந்து உறுப்பினர்கள் உள்ளனர். இப்போது உள்ளவர்கள்:—

1. உயர்திரு. **வை. சங்கரன்** அவர்கள் பி.ஏ., பி.எல். எம். எல். ஏ. தருமகருத்தா
2. ,, **அ. சிதம்பர முதலியார்** எம். எல் .சி. அவர்கள் தர்மகர்த்தா குழுத்தலைவர்
3. ,, **K. M. S. L. நீலகண்டன்** அவர்கள் தர்மகர்த்தா
4. ,, **P. மருதையா** அவர்கள் ,,
5. திருமதி. **புஷ்பம் நடராஜன்** ,, ,,

திருப்பரங்குன்றம் சுப்பிரமணிய சுவாமிகோயில் மேலாளராக (பேஷ்கார்) உயர்திரு. **எ. முத்துசாமி நாயுடு** அவர்கள் இருக்கின்றார்கள்.



பராசலர்



வேத வியாசர்

## பிற குறிப்புகள்

திருப்பரங்குன்றம் ஊராட்சிமன்றத்திற்கு உட்பட்டது. பசுமலை உட்பட இதன் பரப்பளவு சுமார் 5 சதுரக் கல் ஆகும். மக்கள் தொகை ஏறத்தாழ 12 ஆயிரம். மாவட்டக் கழகத் துவக்கப் பள்ளிகள் நான்கும், தனியார் நடத்தும் துவக்கப் பள்ளி ஒன்றும், முத்துத் தேவர் முக்குலத்தோர் உயர்நிலைப் பள்ளி ஒன்றும், கலைத்தந்தை கருமுத்து தியாகராச செட்டியார் அவர்களால் நடத்தப்பெறும் தியாகராசர் பொறியியல் கல்லூரி ஒன்றும் உள்ளன. மலையின் தென்புறம் பாலர் இல்லம் ஒன்றுள்ளது. ஆதரவற்ற சிறுவர் சிறுமிகள் இங்கு உண்டு உறைந்து கல்வி பயில்கின்றனர். நம் அரசியலார் ஆதரவில் இவ்வில்லம் சிறந்த முறையில் நடைபெற்றுவருகிறது. வெளிநாட்டார் ( கனடா ) உதவியும் இதற்குண்டு.

அரசியலார் நடத்தும் மாவட்ட நூலகக் கிளை ஒன்றுள்ளது. மற்றும் அம்பர் ராட்டை நிலையம், அலுமினியத் தொழிற்சாலை, களிமண் பொம்மைகள் செய்யும் நிலையம், சிமிண்ட் பாத்திரங்கள் செய்யும் தொழிலகம், காந்தி நிகேதன கூட்டுறவுக் கிராமக் கைத்தொழிற்சாலை, தேசிய விஸ்தரிப்புத் திட்ட அலுவலகம், பாண்டிய நாடு கூட்டுறவுப் பயிற்சிக் கழகம் முதலியனவும் உள்ளன.

மாவட்டக் கழகச் சார்பில் நடைபெறும் மருத்துவமனை ஒன்றுள்ளது. ஊர்க்காவல் நிலையம் ( Police Station ), அஞ்சல் நிலையம் ( Post Office ) முதலியனவும் உள்ளன.

பரங்குன்றில் வாழ்ந்து முருகனின் பேரருள் பெற்று மறைந்த அடியார் பலரின் சாமாதிகள் பல இங்குள்ளன. சிவப்பிரகாச சுவாமிகள், ஆறுமுக சுவாமிகள், கட்டிக்குளம் மாயாண்டி சுவாமிகள், முட்டை சுவாமிகள், மிளகாய்ச்சாமி என்ற சோம சுந்தரத்தம்மாள், சூட்டுக்கோல் இராமலிங்க சுவாமி கள் முதலியோரின் சமாதிகளில் முறையாகப் பூசை முதலியன நிகழ்வுற்று வருகின்றன.

வாரந்தோறும் வெள்ளிக்கிழமையன்று சந்தை கூடுகிறது. மாட்டுச் சந்தை இங்கு சிறப்பாக உள் ளது. திருமணம் நடத்துவதற்கு ஏற்ற இடங்களும், தனியார் மண்டபங்களும், சத்திரங்களும் பல உள் ளன. கோயிலிலும் திருமணங்கள் பல நடைபெறுகின் றன.

திருப்பரங்குன்றம் பல்வகையாலும் பெருமை பெற்று இன்று விளங்குகிறது. இதன் வரலாற்றை அறிவோரும் இந்நூலில் உள்ள பக்திப்பாடல்களைப் பயில்வோரும் முருகப்பெருமான் திருவருள் பெற்று எண்ணிய நலன்களை எளிதில் எய்தி இன்ப வாழ்வு பெறுவார்களாக!

வாழ்க செவ்வேள் மலரடி போற்றி!

பரங்கிரி முருகன் பதமலர் போற்றி!



# நக்கீரர் அருளிய திருமுருகாற்றுப்படை

## திருப்பரங்குன்றம்

உலக முவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்
கோவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி
உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்றாட்
செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை
மறுவில் கற்பின் வாணுதல் கணவன்
கார்கோண் முகந்த கமஞ்சூன் மாமழை
வாள்போழ் விசும்பின் வள்ளுறை சிதறித்
தலைப்பெய றலைஇய தண்ணறுங் கானத்
திருள்படப் பொதுளிய பராரை மராஅத்
துருள்பூந் தண்டார் புரளு மார்பினன்
மால்வரை நிவந்த சேணுயர் வெற்பிற்
கிண்கிணி கவைஇய வொண்செஞ் சிறடிக்
கணைக்கால் வாங்கிய நுசுப்பிற் பணைத்தோட்
கோபத் தன்ன தோயாப் பூந்துகில்
பல்காசு நிரைத்த சில்கா ழல்குற்
கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பி
னாவலொடு பெயரிய பொலம்புனை யவிரிழைச்
சேணிகந்து விளங்குஞ் செயிர்தீர் மேனித்
துணையோ ராய்ந்த விணையீ ரோதிச்
செங்கால் வெட்சிச் சிறித ழிடையிடுபு
பைந்தாட் குவளைத் தூவிதழ் கிள்ளித்
தெய்வ வுத்தியொடு வலம்புரி வயின்வைத்துக்
திலகந் தைஇய தேங்கமழ் திருநுதன்
மகரப் பகுவாய் தாழமண் ணுறுத்துத்
துவர முடித்த துகளறு முச்சிப்

பெருந்தண் சண்பகஞ் செரீஇக் கருந்தகட்
டுளைப்பூ மருதி னொள்ளிண ரட்டிக்
கிளைக்கவின் றெழுதரு கிழ்நீர்ச் செவ்வரும்
பிணைப்புறு பிணையல் வளைஇத் துணைத்தக
வண்காது நிறைந்த பிண்டி யொண்டளிர்
நுண்பூ ணாகந் திளைப்பத் திண்காழ்
நறுங்குற டுரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை
தேங்கமழ் மருதினர் கடுப்பக் கோங்கின்
குவிமுகி ழிளமுலைக் கொட்டி விரிமலர்
வேங்கை நுண்டா தப்பிக் காண்வர
வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெரியாக்
கோழி யோங்கிய வென்றடு விறற்கொடி
வாழிய பெரிதென் றேத்திப் பலருடன்
சீர்திகழ் சிலம்பகஞ் சிலம்பப்பாடிச்
சூரர மகளி ராடுஞ் சோலை
மந்தியு மறியா மரன்பயி லடுக்கத்துச்
சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தட்
பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்
பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்குச்
சூர்முத றடிந்த சுடரிலை நெடுவே
லுலறிய கதுப்பிற் பிறம்பற் பேழ்வாய்ச்
சுழல்விழிப் பசுங்கட் சூர்த்த நோக்கிற்
கழல்கட் கூகையொடு கடும்பாம்பு தூங்கப்
பெருமுலை யலைக்குங் காதிற் பிணர்மோட்
டுருகெழு செலவி னஞ்சுவரு பேய்மகள்
குருதி யாடிய கூருகிர்க் கொடுவிரற்
கண்டொட் டுண்ட கழிமுடைக் கருந்தலை
ஒண்டொடி தடக்கையி னேந்தி வெருவர
வென்றடு விறற்களம் பாடித்தோள் பெயரா
நிணந்தின் வாய டுணங்கை தூங்க
இருபே ருருவி னொருபே ரியாக்கை
அறுவேறு வகையி னஞ்சுவர மண்டி
அவுணர் நல்வல மடங்கக் கவிழிணர்
மாமுத றடிந்த மறுவில் கொற்றத்
தெய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்

சேவடி படருஞ் செம்ம லுள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந் துறையுஞ்
செலவுநீ நயந்தனை யாயிற் பலவுட
னன்னர் நெஞ்சத் தின்னிசை வாய்ப்ப
இன்னே பெறுதிநீ முன்னிய வினையே
செருப்புகன் றெடுத்த சேணுயர் நெடுங்கொடி
வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப்
பொருநர்த் தேய்த்த போரரு வாயிற்
றிருவிற் றிருந்த தீதுதீர் நியமத்து
மாடமலி மறுகிற் கூடற் குடவயி
னிருஞ்சேற் றகல்வயல் விரிந்துவா யவிழ்ந்த
முட்டாட் டாமரைத் துஞ்சி வைகறைக்
கட்கமழ் நெய்தல் ஊதி யெற்படக்
கண்போன் மலர்ந்த காமர் சுனைமலர்
அஞ்சிறை வண்டி னரிக்கண மொலிக்குங்
குன்றமர்ந் துறைதலு முரிய னதாஅன்று;

அருணகிரிநாதர்

அருளிச்செய்த

## திருப்பரங்குன்றத் திருப்புகழ்

[1]

கருவடைந்து பத்துற்ற திங்கள்
வயிறிருந்து முற்றிப்பயின்று
கடையில்வந்து தித்துக்குழந்தை வடிவாகிக்
கழுவியங்கெ டுத்துச்சுரந்த
முலையருந்து விக்கக்கிடந்து
கதறியங்கை கொட்டித் தவழ்ந்து நடமாடி
அரைவடங்கள் கட்டிச்சதங்கை
யிடுகுதம்பை பொற்சுட்டி தண்டை
அவையணிந்து முற்றிக்கிளர்ந்து வயதேறி

அரியபெண்கள் நட்பைப்புணர்ந்து
பிணியுழன்று சுற்றித்திரிந்த
தமையுமுன்க்ரு பைச்சித்தமென்று பெறுவேனோ
இரவியிந்த்ரன் வெற்றிக்குரங்கி
னரசரென்று மொப்பற்றவுந்தி
யிறைவன்எண்கி னக்கர்த்தனென்றும் நெடுநீலன்
எரியதென்றும் ருத்ரற்சிறந்த
அநுமனென்றும் ஒப்பற்றஅண்டர்
எவருமிந்த வர்க்கத்தில் வந்து புனமேவ
அரியதன்ப டைக்கர்த்தரென்று
அசுரர்தங்கி ளைக்கட்டைவென்ற
அரிமுகுந்தன் மெச்சுற்ற பண்பின் மருகோனே
அயனையும்பு டைத்துச்சினந்தி
வுலகமும்ப டைத்துப்பரிந்துள்
அருள்பரங்கி ரிக்குட்சிறந்த பெருமாளே.

[2]

உனைத்தினந்தொழு திலனுனதியல்பினை
உரைத்திலன்பல மலர்க்கொடுனடியிணை
உறப்பணிந்தில னொருதவமிலனுன தருள்மாறு
உளத்துளன்பின ருறைவிடமறிகிலன்
விருப்பொடுன்சிக ரமும்வலம்வருகிலன்
உவப்பொடுன்புகழ் துதிசெயவிழைகிலன் மலைபோலே
கனைத்தெழும்பக டதுபிடர்மிசைவரு
கறுத்தவெஞ்சின மறலிதனுழையினர்
கதித்தடர்ந்தெறி கயிறடுகதைகொடு பொருபோதே
கலக்குறுஞ்செய லொழிவறஅழிவுறு
கருத்துநைந்தல முறுபொழுதளவைகொள்
கணத்திலென்பய மறமயில் முதுகினில் வருவாயே
வினைத்தலந்தனி லலகைகள்குதிகொள
விழுக்குடைந்துமெ யுகுதசைகழுகுண
விரித்தகுஞ்சிய ரெனுமவுணரையமர் புரிவேலா

மிருந்த பண்பயில் குயில்மொழியழகிய
கொடிச்சிகுங்கும முலைமுகடுழுநறை
விரைத்தசந்தன ம்ருகமதபுயவரை யுடையோனே
தினத்தினஞ்சதுர் மறைமுனிமுறைகொடு
புனற்சொரிந்தலர் பொதியவிணவரொடு
சினத்தைநிந்தனை செயுமுனிவரர்தொழ மகிழ்வோனே
தெனத்தெனந்தென எனவரியளிநறை
தெவிட்டஅன்பொடு பருகுயர்பொழில்திகழ்
திருப்பரங்கிரி தனிலுறைசரவண பெருமாளே.

## [3]

அருக்குமங்கையர் மலரடிவருடியே
கருத்தறிந்தபி னரைதனிலுடையினை
அவிழ்த்துமங்குள அரசிலைதடவியு மிருதோளுற்
றணைத்துமங்கையி னடிதொறு நகமெழ
வுதட்டைமென்றுப லிடுகுறிகளுமிட
அடிக்களந்தனில் மயில்குயில்புறவென மிகவாய்விட்
டுருக்குமங்கியின் மெழுகெனவுருகிய
சிரத்தைமிஞ்சிடு மனுபவமுறுபலம்
உறக்கையின்கனி நிகரெனஇலகிய தனமேல்வீழ்ந்
துருக்கலங்கிமெ யுருகிடவமுதுகு
பெருத்தவுந்தியின் முழுகிமெயுணர்வற
வுழைத்திடுங்கன கலவியைமகிழ்வது தவிர்வேனோ
இருக்குமந்திர மொழிவகைமுனிபெற
வுரைத்தசம்ப்ரம சரவணபவகுக
இதத்தஇங்கித மிலகியஅருமுக எழில்வேளென்
றிலக்கணங்களு மியலிசைகளுமிக
விரிக்குமம்பல மதுரிதகவிதனை
யியற்றுசெந்தமிழ் விதமொடுபுயமிசை புனைவோனே
செருக்குமம்பல மிசைதனிலசைவுற
நடித்தசங்கரர் வழிவழியடியவர்
திருக்குருந்தடி யருள்பெறஅருளிய குருநாதா

திருக்குழந்தையு மெனஅவர்வழிபடு
குருக்களின்திற வெனவருபெரியவ
திருப்பரங்கிரி தனிலுறைசரவண பெருமானே.

[4]

கருக்குமஞ்சன விழியிணை அயில்கொடு
நெருக்கிநெஞ்சற எறிதருபொழுதொரு
கனிக்குளின்சுவை அமுதுகுமொருசிறு நகையாலே
களக்கொழுங்கலி வலைகொடுவிசிறியும்
மனைக்கெழுந்திரு மெனமனமுருகவொர்
கவற்சிகொண்டிட மனைதனிலழகொடு கொடுபோகி
நறைத்தபஞ்சணை மிசையினில்மனமுற
அணைத்தகந்தனி லிணைமுலையெதிர்பொர
நகத்தழுந்திட அமுதிதழ்கருகியு மிடறூடே
நடித்தெழுங்குரல் குமுகுமுகுமுவென
இசைத்துநன்கொடு மனமதுமறுகிட
நழுப்புநஞ்சன சிறுமிகள்துயரற அருள்வாயே
நிறைத்ததெண்டிரை மொகுமொகுமொகுவென
வுரத்தகஞ்சுகி முடிநெறுநெறுவென
நிரைத்தஅண்டமு கடுகிடுகிடுவென வரைபோலும்
நிவத்ததிண்கழல் நிசிசரருரமொடு
சிரக்கொடுங்குவை மலைபுரைதரஇரு
நிணக்குழம்பொடு குருதிகள்சொரிதர அடுதீரா
திறற்கருங்குழ லுமையவளருளுறு
புழைக்கைமன்கட கயமுகமிகவுள
சிவக்கொழுந்தன கணபதியுடன்வரு மிளையோனே
சினத்தொடுஞ்சம றுதைபடநிறுவிய
பரன்குளன்புறு புதல்வநன்மணியுகு
திருப்பரங்கிரி தனிலுறைசரவண பெருமாளே.

[5]

வடத்தைமிஞ்சிய புளகிதவனமுலை
தனைத்திறந்தெதிர் வருமிளைஞர்களுயிர்
மயக்கினயங்கணை மதனனையொருஅரு மையினாலே

வருத்திவஞ்சக நினைவொடுமெலமெல
நகைத்துநண்பொடு வருமிருமெனவுரை
வழுத்தியங்கவ ரொடுசருவியுமுடல் தொடுபோதே
விடத்தைவென்றிடு படைவிழிகொடுமுள
மருட்டிமண்பொருள் கவர்பொழுதினில்மயல்
விருப்பெனும்படி மடிமிசையினில்விழு தொழில்தானே
விளைத்திடும்பல கணிகையர்தமதுபொய்
மனத்தைநம்பிய சிறியனைவெறியனை
விரைப்பதங்கனில் அருள்பெறநினைகுவ துளதோதான்
குடத்தைவென்றிரு கிரியெனஎழில்தள
தளத்தகொங்கைகள் மணிவடமணிசிறு
குறக்கரும்பின்மெப் துவள்புயனெனவரு வடிவேலா
குரைக்கருங்கடல் திருவணையெனமுனம்
அடைத்திலங்கையி னதிபதிநிசிசரர்
குலத்தொடும்பட வொருகணைவிடுமரி மருகோனே
திடத்தெதிர்ந்திடு மசுரர்கள்பொடிபட
அயிற்கொடும்படை விடுசரவணபவ
திறற்குகன்குரு பரனெனவருமொரு முருகோனே
செழித்ததண்டலை தொறுமிலகியகுட
வளைக்குலந்தரு தரளமுமிகுமுயர்
திருப்பரங்கிரி வளநகர்மருவிய பெருமாளே.

[6]

பதித்தசெஞ்சந்தப் பொற்குடநித்தம்
பருத்துயர்ந்தண்டத் திற்றலைமுட்டும்
பருப்பதந்தந்தச் செப்பவையொக்குந் தனபாரம்
பட்ப்புயங்கம்பற் கக்குகடுப்பண்
செருக்குவண்டம்பப் பிற்கயலொக்கும்
பருத்தகண்கொண்டைக் கொக்குமிருட்டென் றளேனோர்கள்
துதித்துமுன்கும்பிட் டுற்றதுரைத்தன்
புவக்கநெஞ்சஞ்சச் சிற்றிடைசுற்றுந்
துகிற்களைந்தின்பத் துர்க்கமளிக்குங் கொடியார்பால்

துவக்குறும்பங்கப் பித்தனவத்தல்
புலிக்குளென்சிந்தைப் புத்திமயக்கந்
துறக்கநின்தண்டைப் பத்மமெனக்கென் றருள்வாயே
குதித்துவெண்சங்கத் தைச்சுறவெற்றுங்
கடற்கரந்தஞ்சிய புக்கவரக்கன்
குடற்சரிந்தெஞ்சக் குத்திவிதிர்க்குங் கதிர்வேலா
குலக்கரும்பின்சொற் றத்தையிபப்பெண்
தனக்குவஞ்சஞ்சொற் பொச்சையிடைக்குங்
குருக்குருகுங்குங்குக் குக்குகுகுக்குங் குகுகூகூ
திதித்திதிந்திந்தித் தித்தியெனக்கொம்
பதிர்த்துவெண்சண்டக் கட்கம்விதிர்த்துந்
திரட்குவிந்தங்கட் பொட்டெழுவெட்டுங் கொலைவேடர்
தினைப்புனஞ்சென்றிச் சித்தபெணைக்கண்
டுருக்கரந்தங்குக் கிட்டியணைத்தொண்
திருப்பரங்குன்றிற் புக்குளிருக்கும் பெருமாளே.

[7]

மன்றலங்கொந்துமிசை தெந்தனந்தெந்தனென
வண்டினங்கண்டுதொடர் குழல்மாதர்
மண்டிடுந்தொண்டையமு துண்டுகொண்டன்புமிக
வம்பிடுங்கும்பகன தனமார்பில்
ஒன்றஅம்பொன்றுவிழி கன்றஅங்கங்குழைய
உந்தியென்கின்றமடு விழுவேனை
உன்சிலம்புங்கனக தண்டையுங்கிண்கிணியும்
ஒண்கடம்பும்புனையும் அடிசேராய்
பன்றியங்கொம்புகம டம்புயகஞ்சுரர்கள்
பண்டையென்பங்கமணி பவர்சேயே
பஞ்சரங்கொஞ்சுகிளி வந்துவந்ததந்துகர
பண்டிதன்தம்பியெனும் வயதூரா
சென்றுமுன்குன்றவர்கள் தந்தபெண்கொண்டுவளர்
செண்பகம்பைம்பொன்மலர் செறிசோலை
திங்களுஞ்செங்கதிரு மங்குலுந்தங்குமுயர்
தென்பரங்குன்றிலுறை பெருமாளே.



2. திருமால் அவதாரங்கள்

[8]

சந்தனந் திமிர்ந்தணைந்து
குங்குமங் கடம்பிலங்கு
சம்பகஞ் செறிந்திலங்கு திரடோளும்
தண்டையஞ் சிலம்பலம்ப
வெண்டையஞ் சலன்சலென்று
சந்தமன் சதங்கைகொஞ்ச மயிலேறி
தந்திமிந் தமிந்திமிந்தி
தந்தனந்தந்தனென்று
சென்றசைந் துகந்துவந்து க்ருபையோடே
சிந்தையங் குலம்புகுந்து
சந்ததம் புகழ்ந்துணர்ந்து
செம்பதம் பணிந்திரென்று மொழிவாயே
அந்தமந் திகொண்டிலங்கை
வேந்தழிந் திடும்பகண்டன்
அங்கமுகுலைந்தரங்கொள் பொடியாக
அம்பகும் பனுங்கலங்க
வெஞ்சினம் புரிந்துநன்ற
அம்புகொண் டுவென்றகொண்டல் மருகோனே
இந்துவுங் கரந்ததும்பை
கொன்றையுஞ் சலம்புனைந்தி
டும்பரன் சிலம்பமர்ந்த குமரேசா
இந்திரன் பதம்பெறண்டர்
தம்பயங் கடிந்துமுந்த
எங்கணுங் கமழ்ந்திருந்த பெருமாளே.

[9]

எந்தன்சட லங்கம்பல பங்கம்படு தொந்தங்களில்
என்றுந்துயர் பொன்றும்படி யொருநாளே
இன்பந்தரு செம்பொன்கழ லுந்துங்கழல் தந்தும்பினை
யென்றும்படி பந்தங்கெட மயிலேறி
வந்தும்பிர சண்டம்பகி ரண்டம்புவி யெங்குந்திசை
மண்டும்படி நின்றுஞ்சுட ரொளிபோலும்

வஞ்சங்குடி கொண்டுந்திரி நெஞ்சந்துக ளென்றுங்கொளும்
வண்டன்தமி யன்றன்பவம் ஒழியாதோ
தந்தந்தன திந்திந்திமி யென்றும்பல சஞ்சங்கொடு
தஞ்சம்புரி கொஞ்சுஞ்சிறு மணியாரம்
சந்தந்தொனி கண்டும்புய லங்கள்சிவ னம்பன்பதி
சம்புந்தொழ நின்றுந்தினம் விளையாடும்
கந்தன்குக னென்றன்குரு வென்றுந்தொழு மன்பன்கவி
கண்டுந்திட அன்றன்பொடு வருவோனே
கண்டின்கனி சிந்துஞ்சுவை பொங்கும்புனல் தங்கும்பொழில்
கந்தங்கொள்ப ரங்குன்றமர் பெருமாளே.

## [10]

சருவும்படி வந்தனனிங்கித
மதனின்றிட அம்புலியுஞ்சுடு
தழல்கொண்டிட மங்கையர்கண்களின் வசமாகிச்
சயிலங்கொளு மன்றல்பொருந்திய
பொழிலின்பயில் தென்றலுமொன்றிய
தடவஞ்சுனை துன்றியெழுந்திட இதமாவே
இரவும்பக லந்தியுநின்றிடு
குயில்வந்திசை தெந்தெனவென்றிட
இருகண்கள்து யின்றிடலின்றியும் அயர்வாகி
இவணெஞ்சுப தன்பதனென்றிட
மயல்கொண்டுவ ருந்தியவஞ்சகன்
இனியுன்றன்ம லர்ந்திலகும்பதம் அடைவேனோ
திருவொன்றிவி ளங்கியஅண்டர்கள்
மனையின்தயி ருண்டவனெண்டிசை
திகழும்புகழ் கொண்டவன்வண்டமிழ் பயில்வோர்பின்
திரிகின்றவன் மஞ்சுநிறம்புனை
பவன்மிஞ்சுதி றங்கொளவென்றடல்
செய்துங்கமு குந்தன்மகிழ்ந்தருள் மருகோனே
மருவுங்கடல் துந்துமியுங்குட
முழவங்கள்கு மின்குமினென்றிட
வளமொன்றிய செந்திலில் வந்தருள் முருகோனே
மதியுங்கதி ரும்புயலுந்தின
மறுகும்படி அண்டமிலங்கிட
வளர்கின்றப ரங்கிரிவந்தருள் பெருமாளே.

[11]

வரைத்தடங் கொங்கையாலும் வளைப்படுஞ் செங்கையாலும்
மதர்த்திடுங் கெண்டையாலும் அனைவோரும்
வடுச்செயுந்தொண்டையாலும் விரைத்திடுங்கொண்டையாலும்
மருட்டிடுஞ் சிந்தைமாதர் வசமாகி
எரிப்படும்பஞ்சுபோல மிகக்கெடுந்தொண்டனேனும்
இனற்படுந் தொந்தவாரி கரையேற
இசைத்திடுஞ் சந்தபேத மொழித்திடுந் தண்டைசூழும்
இணைப்பதம் புண்டரீக மருள்வாயே
சுரர்க்குவஞ் சஞ்செய்சூரன் இளக்ரவுஞ் சந்தனோடு
துளக்கெழுந் தண்டகோள மளவாகத்
துரத்தியன் றிந்த்ரலோகம் அழித்தவன் சம்ப்ரதாயம்
சுடப்பருஞ் சண்டவேலை விடுவோனே
செருக்கெழுந் தும்பரசேனை துளக்கவென் றண்டமூடு
தெழித்திடுஞ் சங்கபாணி மருகோனே
தினைப்புனஞ் சென்றுலாவு குறத்தியின் பம்பராவு
திருப்பரங் குன்றமேவு பெருமானே

[12]

பொருப்புறுங் கொங்கையர் பொருட்கவர்ந்தொன்றிய
பிணங்கிடுஞ் சண்டிகள் வஞ்சமாதர்
புயற்குழன் றங்கமழ் அறற்குலந்தங்கவிர்
முருக்குவண்செந்துவர் தந்துபோகம்
அருத்திடுஞ்சிங்கியர் தருக்கிடுஞ்செங்கயல்
அறச்சிவந்தங்கையில் அன்புமேவும்
அவர்குழன் றங்கமு மறத்தளர்ந்தென்பயன்
அருட்பதம் பங்கைய மான்புருதோ
யிருத்தனும்பங்கைய னலர்க்கணன் சங்கரர்
விதித்தெனுங்கும்பிடு கந்தவேளே
இடுக்கண உந்துஞ்சம ணரைப்பெருந்திண்கழு
மிசைக்கிடுஞ்செந்தமி ழுங்கவாயா

செருக்குதண்சம்பக வனத்திடங்கொங்கொடு
திறந்செழுந்சந்தமில் துன்றிடு
திளைப்புனம்பைங்கொடி தனத்துடன்சென்றனே
திருப்பரங்குன்றுறை தம்பிரானே.

## [13]

தடக்கைப்பங்கையங் கொடைக்குக்கொண்டல்தண்
டமிழ்க்குத்தஞ்சமென் றுலகோரைத்
தவித்துச்சென்றிரந் துளத்திற்புண்படுந்
தவிர்ச்சிப்பம்பரந் தனேயூசற்
கடத்தைத்துன்பமண் சடத்தைத்துஞ்சிடுங்
கலத்தைப்பஞ்சஇந் த்ரியவாழ்வைக்
கணத்திற்சென்றிடந் திருத்தித்தண்டையங்
கழற்குத்தொண்டுகொண் டருள்வாயே
படைக்கப்பங்கயன் துடைக்கச்சங்கரன்
புரக்கக்கஞ்சைமன் பணியாகப்
பணித்துத்தம்பயந் தணித்துச்சந்ததம்
பரத்தைக்கொண்டிடுந் தனிவேலா
குடக்குத்தென்பரம் பொருப்பிற்றங்குமங்
குலத்திற்கங்கைதன் சிறியோனே
குறப்பொற்கொம்பைமுன் புனத்திற்செங்கரங்
குவித்துக்கும்பிடும் பெருமாளே.

## [14]

சந்ததம்பந்தத் தொடராலே
சஞ்சலந்துஞ்சித் திரியாதே
கந்தனென்றென்றுற் றுனைநாளுங்
கண்டுகொண்டன்புற் றிடுவேனோ
தந்தியின்கொம்பைப் புணர்வோனே
சங்கரன்பங்கிற் சிவைபாலா

செந்திலங்கண்டிக் கதிர்வேலா
தென்பரங்குன்றிற் பெருமாளே.

[15]

கனகந்திரள் கின்றபெருங்கிரி தனில்வந்துத கன்தகனென்றிடு
கதிர்மிஞ்சிய செண்டையெறிந்திடு கதியோனே
கடமிஞ்சிய னந்தவிதம்புணர் கவளந்தனை யுண்டுவளர்ந்திடு
கரியின்றுணை யென்றுபிறந்திடு முருகோனே
பனகந்துயில் கின்றதிறம்புனை கடல்முன்புக டைந்தபரம்பர்
படரும்புய லென்றவரன்புகொள் மருகோனே
பலதுன்பமு முன்றுகலங்கிய சிறியன்புலை யன்கொலையன்புரி
பவமின்றுக ழிந்திடவந்தருள் புரிவாயே
அனதன்பெயர் ரின்றுருளுந்திரிபுரமுந்திரிவென்றிட வின்புடன்
அழலுந்தநு குந்திறல்கொண்டவர் புதல்வோனே
அடல்வந்துமுழங்கியிடும்பறை டுடுடுண்டுடுண்டுடுண்டெனு
அதிர்கின்றிட அண்டநெறிந்திட வருசூரர்
மனமுந்தல்சென்றிடவன்றவருடலுங்குடலுங்கிழிகொண்டிட
மயில்வென்றனில் வந்தருளுங்கன பெரியோனே
மதியுங்கதி ருந்தடவும்படி யுயர்கின்றவ னங்கள்பொருந்திய
வளமொன்றுப ரங்கிரிவந்தருள் பெருமாளே.

[16]

காதடருங்கயல் கொண்டிசைந்தைம்பொறி
வாளிமயங்கம னம்பயந்தந்திருள்
கால்தரவிருந்துவி சும்பிலங்கும்பொழு தொருகோடி
காய்கதிரென்றொளிர் செஞ்சிலம்புங்கணை
யாழியுடன்கட கந்துலங்கும்படி
காமனெடுஞ்சிலை கொண்டடர்ந்தும்பொரு மயலாலே

வாதுபுரிந்தவர் செங்கைதந்திங்கித
மாகநடந்தவர் பின்றிரிந்துந்தன
மார்பிலழுந்தவ ணைந்திடுந்துன்பம துழலாதே
வாசமிகுந்தக டம்பமென்கிண்கிணி
மாலைகரங்கொளு மன்பவர்வந்தன்பொடு
வாழநிதம்புனை யும்பதந்தந்துன தருள்தாராய்
போதிலுறைந்தருள் கின்றவன்செஞ்சிர
மீதுதடிந்துவி லங்கிடும்புங்கவ
போதவளஞ்சிவ சங்கரன்கொண்டிட மொழிவோனே
பூகமுடன்திகழ் சங்கினங்கொண்டகி
ரீவமடந்தைபு ரந்தரன்தந்தருள்
பூவைகருங்குற மின்கலந்தங்குப விருதோளே
நீதகமொன்றினர் வஞ்சகந்துஞ்சியி
டாதவர்சங்கரர் தந்தவன்பும்பல
சேர்நிருதன்குல மஞ்சமுன்சென்றடு திறலோனே
சீதளமுந்தும ணந்தயங்கும் பொழில்
சூழ்தரவிஞ்சைகள் வந்திறைஞ்சும்பதி
தேவர்பணிந்தெழு தென்பரங்குன்றுறை பெருமாளே.





சிவன்கோயில் முன்தோற்றம்



நந்தவன மண்டபம்

# திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிச்செய்த

# தேவாரத் திருப்பதிகம்

பண்-குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

நீடலர்சோதி வெண்பிறையோடு நிறைகொன்றைச்
சூடலனந்திச் சுடரெரியேந்திச் சுடுகானி
லாடலனஞ் சொல்லணியிழையாளை யொருபாகம்
பாடலன்மேய நன்னகர் போலும் பரங்குன்றே 1

அங்கமொராறும் அருமறை நான்கும் அருள்செய்து
பொங்குவெண்ணூலும் பொடியணிமார்பிற் பொலிவித்துத்
திங்களும் பாம்புந்திகழ்சடை வைத்தோர் தேன்மொழி
பங்கினன் மேய நன்னகர் போலும் பரங்குன்றே. 2

நீரிடங்கொண்ட நிமிர்சடைதன் மேனிறை கொன்றைச்
சீரிடங்கொண்ட வெம்மிறை போலுஞ் சேய்தாய
வோருடம்புள்ளே யுமையொரு பாகமுடனாகிப்
பாரிடம்பாட வினிதுறைகோயில் பரங்குன்றே. 3

வளர்பூங்கோங்க மாதவியோடு மல்லிகைக்
குளிர்பூஞ் சாரல்வண்டறை சோலைப்பரங்குன்றம்
தளிர் போன்மேனித்தை யனல்லாளோ டொருபாகம்
நளிர்பூங்கொன்றை சூடினன் மேயநகர்தானே 4

பொன்னியல்கொன்றை பொறிகிளர்நாகம் புரிசடைத்
துன்னியசோதியாகிய வீசன்றொன்மறை
பன்னிய பாடலாடலன் மேயபரங்குன்றை
யுன்னியசிந்தை யுடையவர்கில்லை யுறுநோயே. 5

கடைநெடுமாடக் கடியரண்மூன்றுங்கனன் மூழ்கத்
தொடைநவில்கின்ற வில்லினனந்திச் சுடுகானிற்
புடைநவில் பூதம் பாடநின்றாடும் பொருசூலப்
படைநவில்வான்ற னன்னகர் போலும் பரங்குன்றே. 6

அயிலுடைவேலோரனல் புல்குகை யினம்பொன்ரு
லெயில்படவெய்த வெம்மிறைமேய இடம்போலு
மயில்பெடைபுல்கி மாநடமாடும் வளர்சோலைப்
பயில்பெடைவண்டு பாடலருத பரங்குன்றே. 7

மைத்தகுமேனி வாளரக்கன்றன் மகுடங்கள்
பத்தினதிண்டோனிருபதுஞ் சென்ருன் பரங்குன்றைச்
சித்தமதொன்றிச் செய்கழலுன்னிச் சிவனென்று
நித்தலுமேத்தத் தொல்வினை நம்மேனில்லாவே. 8

முந்தியி வ்வையந்தாவியமாலு மொய்யொளி
யுந்தியில் வந்திங்கருமறை யீந்தவுரவோனுஞ்
சிந்தையினலுந் தெரிவரிதாகித் திகழ்சோதிப்
பந்தியலங்கை மங்கையோர்பங்கன் பரங்குன்றே. 9

குண்டாய் முற்றுந்திரிவார் கூறைமெய்போர்த்து
மிண்டாய்மிண்டர் பேசிய பேச்சுமெய்யல்ல
பண்டானிழல் மேவியவீசன் பரங்குன்றைத்
தொண்டாலேத்தத் தொல்வினைநம் மேனில்லாவே. 10

தடமலிபொய்கைச் சண்பைமன் ஞானசம்பந்தன்
படமலிநாக மரைக்கசைத்தான் றன்பரங்குன்றைத்
தொடைமலிபாடல் பத்தும்வல்லார் தந்துயர்போகி
விடமலிகண்டனருள் பெருந்தன்மை மிக்கோரே. 11

திருச்சிற்றம்பலம்

---

# சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த

# தேவாரத் திருப்பதிகம்

### பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

கோத்திட்டையுங் கோவலுங் கோயில்கொண்டீருமைக்
கொண்டுழல்கின்றதோர் கொல்லைச்சில்லைச்
சேத்திட்டுக்குத்தித் தெருவேதிரியுஞ்
சில்பூத முநீருந்திசை திசையன
சோத்திட்டு விண்ணோர் பலருந்தொழநும்
மரைக்கோவணத்தோடொரு தோல்புடைசூழ்
தார்த்திட்டதும் பாம்புகைக் கொண்டதும்பாம்
படிகேளு மக்காட் செயவதஞ்சுதுமே. [1]

முண்டந்தரித்தீர் முதுகாடுறைவீர்
முழுநீறு மெய் பூசுதிர் மூக்கப்பாம்பைக்
கண்டத்திலுந்தோளிலுங் கட்டிவைத்தீர்
கடலைக்கடைந்திட்டதோர் நஞ்சையுண்டீர்
பிண்டஞ் சுமந்தும் மொடுங்கூடமாட்டோம்
பெரியாரொடு நட்பினிதென்றிருத்தும்
அண்டங்கடந்தப் புறத்தும்மிருந்தீ
ரடிகேளுமக்காட் செயவஞ்சுதுமே. [2]

மூடாயமுயலகன் முக்கப்பாம்பு
முடைநாறிய வெண்டலை மொய்த்த பல்பேய்
பாடாவரு பூதங்கள் பாய்புலித்தோல்
பரிசொன்றறியாதன பாரிடங்கள்
தோடார்மலர்க் கொன்றையுந் துன்னெருக்குந்
துணைமாமணி நாகமரைக் கசைத்தொன்
றுடாதெனவே செய்தீரெம்பெருமா
னடிகேளுமக்காட் செயவஞ்சுதுமே. [3]

மஞ்சுண்ட மாலைமதி சூடுசென்னி
　　மலையான்மடந்தை மணவாளநம்பி
பஞ்சுண்டவல் குற்பணை மென்முலையா
　　ளொடுநீறு மொன்றுயிருந்தலொழியீர்
நஞ்சுண்டு தேவர்க்கமுதங் கொடுத்த
　　நலமொன்றறி யோமுங்கைநாகமதற்
கஞ்சுண்டுபடமது போகவிடீ
　　ரடிகேளுமக்காட் செயவஞ்சுதுமே. [4]

பொல்லாப்புறங்காட்ட கத்தாட்டொழியீர்
　　புலால்வாயனபேயொடு பூச்சொழியீ
ரெல்லாமறிவீரிதுவேயறியீ
　　ரென்றிரங்குவேனெல்லியு நண்பகலும்
கல்லானிழற்கீழொரு நாட்கண்டதுங்
　　கடம்பூர்க்கரக் கோயிலின் முன்கண்டதும்
அல்லால்விரகொன்றில மெம்பெருமா
　　னடிகேளுமக்காட் செயவஞ்சுதுமே. [5]

தென்னத்தெனத்தெத்தென வென்றுபாடிச்
　　சில்பூதமுநீருந்திசை திசையன
பன்னுன் மறைபாடுதிர் பாசூருளீர்
　　படம் பக்கங்கொட்டுந் திருவொற்றியூரீர்
பண்ணூர்மொழியாளை யொர்பங்குடையீர்
　　படுகாட்டகத்தென்றுமோர்பற்றொழியீர்
அண்ணாமலையேனென்றீராரு ருளீர்
　　அடிகேளுமக்காட் செயவஞ்சுதுமே. [6]

சிங்கத்·துரிமூடுதிர் தேவர்கணந்
　　தொழநிற்றிர் பெற்றமுகந்தேறிடுதிர்
பங்கம்பலபேசிடப் பாடுந்தொண்டர்
　　தமைப்பற்றிக் கொண்டாண்டு விடவுங்கில்லீர்
கங்கைச்சடையீருங் கருத்தறியோங்
　　கண்ணுமூன்றுடையீர் கண்ணேயாயிருந்தா
லங்கத்துறுநோய் களைந்தாளகில்லீ
　　ரடிகேளுமக்காட் செயவஞ்சுதுமே. [7]

பிணிவண்ணத்தவல் வினைதீர்த்தருளீர்
　　பெருங்காட்டகத்திற் பெரும்பேயுநீருந்
துணிவண்ணத்தின் மேலுமோர்தோலுடுத்துச்
　　சுற்றுநாகத்தராய்ச் சுண்ணநீறுபூசி
மணிவண்ணத்தின்மேலுமோர் வண்ணத்தராய்
　　மற்றுமற்றும்பல்பல வண்ணத்தரா
யணிவண்ணத்தராய் நிற்றீரெம்பெருமா
　　னடிகேளுமக்காட் செயவஞ்சுதுமே. [8]

கோளாளியகுஞ்சரங் கோளிழைத்தீர்
　　மலையின்றலையல்லது கோயில்கொள்ளீர்
வேளாளியகாமனை வெந்தழிய
　　விழித்தீர துவன்றியும் வேய்புரையுந்
தோளாளுமை நங்கையொர்பங்குடையீ
　　ருடுகூறையுஞ்சோறுந் தந்தாளகில்லீ
ராளாளியவேகிற்றீ ரெம்பெருமா
　　னடிகேளுமக்காட் செயவஞ்சுதுமே. [9]

பாரோடு விண்ணும்பகலுமாகிப்
　　பனிமால்வரையாகிப் பரவையாகி
நீரோடுதீயுநெடுங் காற்றுமாகி
　　நெடுவெள்ளிடையாகி நிலனுமாகித்
தேரோடவரையெடுத்த வரக்கன்
　　சிரம்பத்திறுத்தீரும் செய்கையெல்லா
மாரோடுங்கூடா வடிகேளிதுவென்
　　னடியேமுமக்காட் செயவஞ்சுதுமே. [10]

அடிகேளுமக்காட் செயவஞ்சுதுமென்
　　றமரர் பெருமானையாரூரனஞ்சி
முடியாலுலகாண்ட மூவேந்தர்முன்னே
　　மொழிந்தாறு மோர்நான்கு மோரொன்றினையும்
படியாயிவைகற்று வல்லவடியார்
　　பரங்குன்றமேய பரமன்னடிக்கே
குடியாகிவானோர்க்கு மோர்கோவுமாகிக்
　　குலவேந்தராய் விண்முழுதாள்பவரே. [11]

திருச்சிற்றம்பலம்.

# தலத்தைப் பற்றிய நூல்கள்

| நூல் | பாடியவர்கள் |
|---|---|
| 1. திருமுருகாற்றுப்படை | நக்கீரர் |
| 2. பரிபாடல் (சில பாடல்கள்) | சங்க காலப் புலவர்கள் |
| 3. அகநானூறு .. | .. |
| 4. தேவாரம் ( 2 பதிகம் ) | சம்பந்தர், சுந்தரர் |
| 5. திருப்புகழ் ( சில பாடல்கள் ) | அருணகிரிநாதர் |
| 6. திருவகுப்பு (ஒரு வகுப்பு) | .. |
| 7. கந்தபுராணம் (சில பாடல்கள்) | கச்சியப்ப சிவாசாரியர் |
| 8. கந்தபுராணச் சுருக்கம் .. | சம்பந்த சரணாலயர் |
| 9. திருப்பரங்கிரிப் புராணம் | நிரம்ப அழகிய தேசிகர் |
| 10. சத்தியகிரி மகாத்மியம் | (கிரந்தமூலம்) ஆசிரியர் பெயர் இல்லை |
| 11. பரங்கிரிப் பிள்ளைத் தமிழ் | மு. ரா. அருணாசலக்கவிராயர் |
| 12. பரங்கிரிப் பாமாலை | .. |
| 13. .. கலித்துறை அந்தாதி | .. |
| 14. .. பதிற்றுப்பத்தந்தாதி | .. |
| 15. .. வெண்பா அந்தாதி | .. |
| 16. .. அலங்காரம் | .. |
| 17. .. மும்மணிக்கோவை | .. |
| 18. .. அநுபூதி | .. |
| 19. .. கோவை | ,, |
| 20. குமரகுருதாசசுவாமிகள் பாடல் 10 | குமரகுருதாசசுவாமிகள் (பாம்பன்) |
| 21. முருகன் அருள்வேட்டல் | திரு. வி. கலியாண சுந்தரனார் |
| 22. முருகன் வரப்பிரசாத மாலை | அருட்கவி மு. வீரவேல் |
| 23. சிவாட்சர தீபம் | .. |
| 24. தேவாரச் சந்தப் பாமாலை | .. |
| 25. திருவருள் விலாசம் | .. |
| 26. திருப்பரங்கிரி மும்மணிக் கோவை | பாலகவி வே. இராமநாதன் செட்டியார் |



தெப்பவிழா



பதினாறுகால் மண்டபம்